# ஸப்தகிரி




திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

## தினசரி பூசைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன
3-45 முதல் 4-30 வரை ; தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலுக்குள் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,(தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் மதியம் 12-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, ஏகாந்தம், 2வது மணி.
1-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**
1-00 முதல் 7-00 வரை: சர்க்கார் மற்றும் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள், ஊஞ்சல்சேவை முதலியன (சர்க்கார் மற்றும் ஆர்ஜித தெப் போற்சவங்கள் செவ்வாய்க்கிழமைகளில் மட்டுமே,
இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், (ஏகாந்தம்) இரவு மணி
8-00 முதல் 12-00 (நடு இரவு) **ஸர்வதரிசனம்**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக் கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்த சேவை (தனி)

**புதன் கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபி ஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2வது மணி.
8-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்.**
மதியம் : 1-00 முதல் மாலை 6-00 வரை: சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன
இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன
8-00 முதல் நடுஇரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்.**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை, பூலங்கி சேவை ஆகியவை நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை (ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் 8-00 வரை : சாலிம்பு, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன.
8-00 முதல் மாலை 6-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன.
மாலை 6-00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவுமணி முதலியன.
இரவு 8-00 முதல் 12-00 வரை : **பூலங்கி ஸர்வதரிசனம்**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)
3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், காலை முதல் மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
5-00 முதல் 7-00 வரை : அபிஷேகம் (தனி)
7-00 முதல் 8-30 வரை : சமர்ப்பணை முதலியன
8-30 முதல் 9-30 வரை : தோமால சேவை அர்ச்சனை (தனி)
9-30 முதல் 10-00 வரை : 2வது மணி, பலி, சாத்துமுறை முதலியன
10-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம மோற்சவங்கள், வாகனசேவைகள், சர்க்கார் மற்றும் ஆர்ஜித ஊஞ்சல் சேவை முதலியன,
இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள் இரவு மணி முதலியன.
8-00 முதல் இரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

இதடே யதடு காபோ லேலிக பண்ட்டுனுனெரி
மிதிலேனி ராகவுநீ மேட்டி ஹனுமந்துடு

ஜலதி பந்திஞ்சி தாடெ சலபட்டி ராகவுடு
அலரி ஊரகே தாடெ ஹநுமந்துடு
அலுகதோ ராவணுனி யதடணசெனதடு
தலசி மைராவணுனி தண்டிஞ்செனிதடு

கொண்ட பெல்லகிஞ்செ தொல்லி கோவர்தனுடதடு
கொண்டதோ சஞ்சீவி யெத்தெ கோரியீதடு
குண்டு கரசெ நஹல்யகொரகு சீதாபதி
குண்டு கரகக பாடெ கோரி யீதடு

அஞ்சனாசலமுமீத னதடு ஸ்ரீ வேங்கடேசு
டஞ்சநீ தனயுடாய நனில ஜுடு
கஞ்சாப்தகுலராம கனுடு தானுனு தயா
புஞ்சமாய மங்காம்புதி ஹனுமந்துடு





ராமன்தான் அனுமனும். கூறப்புகின் அவன் முடிவில்லாத தலைவனானான்; இவன் பெருமைக்குரிய தொண்டனானான்.

கடலை அடக்கி அதனை விடாப்பிடியுடன் கடந்தவன் ராகவன். ஆனால் இவனே அனாவசியமாக அக்கடலைக் கடந்தவன். அவன் கோபத்தால் வில்லேந்தி ராவணனை வென்றவன். இவனே மனத் தாலேயேமை ராவணனைத் தண்டித்தவன்.

அன்று மலையைப் பெயர்த்தெடுத்துப் பசுக்களைக் காத்தவன் அவன். இவனே சஞ்சீவி மலையினையே கையில் விளையாட்டாக எடுத்தவன். அகல்யைக்காக பாறையைத் தொட்டவன் சீதையின் நாயகன். இவன் மலையே உருகுமாறு பாடியவன்.

அஞ்சனை மலைமீது குடிகொண்டவன் வேங்கடவன். அஞ்சனையின் மகனான் இவ்வாயு புத்திரன். ஆகவே மங்காபுதியில் உள்ள சூர்யகுலத்தோன்றலான ஸ்ரீராமனும், அவன் தொண்டனான அனுமனும் கருணை மழையாகத் திகழ்கின்றார்கள்.

(தாள்ளபாக்க ஸ்ரீ அன்னமாச்சார்யா அவர்கள் தன்னுடைய காலமான கி.பி. 15-ம் நூற்றாண்டில் இருந்த மங்காம்புதி அனுமனைப்பற்றிபலவாறு போற்றிப் புகழ்கிறார் இக்கீர்த்தனையில்)



# ஸப்தகிரி


மே 1981

மலர் 11
இதழ் 12

தனிப்பிரதி 50 காசு
வருடச் சந்தா ரூ. 6

*சிறப்பாசிரியர் :*

திரு. பி. வி. ஆர். கே. பிரசாத், I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*ஆசிரியர் :*

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

*அச்சிடுபவர் :*

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு:
EDITOR
'Sapthagiri'
Alipiri Road,
TIRUPATI.


## உள்ளுறை

 

# செய்திச் சுருக்கம்

 

## தங்கக் கவசம்

திருப்பதிக்கு அருகில் உள்ள நாராயண வனத்திலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர சுவாமியின் பிராதான மற்றும் உள் கோபுரங்களுக்கு ரூ. 12.67 இலட்சம் செலவில் தங்கக் கவசம் போர்த்தப்பட்டுள்ளது. 7.5 கிலோ எடையுள்ள சுத்தத் தங்கம் இப்பணிக்கு பயன்படுத்தப்பட்டது. பிரதான கோயிலும், சுற்றியுள்ள சிறு கோயில்களும் அண்மையில் ரூ. 3 இலட்சம் செலவில் புதுப்பிக்கப்பட்டன. ஸ்ரீ பத்மாவதி தாயாரை ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மணம்புரிந்த இடமாகக் கருதப்படும் இந்நாராயணவனம், திருப்பதியிலிருந்து சுமார் 25 மைல் தொலைவில் உள்ளது. இக்கோயிலின் சம்ப்ரோக்ஷணம் அண்மையில் நடைபெற்றது.

## இடமாற்றம்

தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா சிற்பக்கலை நிலையம் அண்மையில், தி. தி. தேவஸ்தானத்தாரின் 3-வது புதிய சத்திரத்திலிருந்து, கே. டி. சாலையில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் கட்டிடத்திற்கு (தி. தி. தே. நிர்வாகக் கட்டிடத்திற்கு எதிரில்) இடம் மாற்றஞ் செய்யப்பட்டுள்ளது.

## கீதைச் சொற்பொழிவு

மாவட்ட இந்து தர்ம ரக்ஷண சமஸ்தா மற்றும் சோடவரம் ஸ்ரீவேங்கடேஸ்வரா பக்த சங்கம் சார்பில் அண்மையில் சோட வரத்தில் (விசாகப்பட்டினம் மாவட்டம்) அகிலாந்திர சாது பரிஷத்தின் தலைவர் தவத்திரு ஸ்ரீ மாதா நிரஞ்சனானந்தரி அவர்களின் கீதைச் சொற்பொழிவுகள் ஒன்பது நாட்களுக்கு நடைபெற்றன. இதுபோது, தி. தி. தேவஸ்தானத்தாரின் சார்பில் இந்து தர்ம ரக்ஷண சமஸ்தாவினரால் நடத்தப்பட்ட 'காப்பியக் கல்வி' தேர்வில் முதலாவதாக தேர்ந்தெடுக்கப்பட்ட செல்வன். பி. ராமகிருஷ்ண ராவ் எனும் மாணவனுக்கு, மாதாஜியினால் முதல் பரிசுக்குரிய வெள்ளிப் பதக்கம் வழங்கப்பட்டது.

## மும்மூர்த்தி ஆராதனை விழா

தி. தி. தேவஸ்தானத்தாரின் திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா இசை மற்றும் நாட்டியக் கல்லூரி, ஸ்ரீவேங்கடேஸ்வரா நாதஸ்வரம்பள்ளி ஆகியவற்றின் சார்பில் இசை மேதாவிகளான ஸ்ரீ தியாகராஜர், ஸ்ரீ முத்துசுவாமி தீட்சதர், சியாமா சாஸ்திரி ஆகியோரின் ஆராதனை விழா 26-3-81 அன்று, மேற்கூறிய கல்லூரி அரங்கில் இனிது நடைபெற்றது. இவ் ஆராதனை விழாவை தி. தி. தே. செயலாட்சித் தலைவரின் துணைவியரான திருமதி. கோபிகா பிரஸாத் அவர்கள் துவக்கி வைத்தார். அதனைத் தொடர்ந்து, அன்று இரவு 10 மணி வரை, மேற்படி இசைக் கல்லூரி, ஸ்ரீ வேங்கடேஸ்வரா கலா பீடம், ஸ்ரீ அன்னமாச்சார்யா கலைக் குழு ஆகியவற்றைச் சார்ந்த ஆசிரியப் பெருமக்கள் மற்றும் மாணவர்களின் இன்னிசைக் கச்சேரிகள் நடைபெற்றன.

27-3-81 அன்று ஸ்ரீ வேங்கடேஸ்வரா இசை மற்றும் நாட்டியக் கல்லூரி, மற்றும் நாதஸ்வர பள்ளியின் கலாச்சார விழா திருப்பதியில் வெகு சிறப்பாக நடைபெற்றது. இதன் சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்குத் தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா கலா பீடத்தின் சிறப்பு அலுவலர் திரு. பி. ரஜனிகாந்த ராவ் அவர்கள் தலைமை வகிக்க, விழாவிற்குச் சிறப்பு விருந்தினராக தி. தி. தே. சமய வெளியீடு திட்டத்தின் கூட்டுறவாளர் டாக்டர். எஸ். பி. ரகுநாதாச்சார்யா அவர்கள் பங்கேற்றார். அன்று மாலை மேற்படி கல்லூரியின் மாணவர்களின் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

அடுத்த நாளான 28-3-81 அன்று மேற் குறிப்பிட்ட கல்லூரியின் ஆண்டு விழா இனிது நடைபெற்றது.

## 478-வது நினைவு நாள் விழா

15-ம் நூற்றாண்டின் தெலுங்குக் கவிஞரும், திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்

## சந்தாதாரர்களுக்கு....

30-6-81 ம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. தொகை அனுப்ப வேண்டிய முகவரி: The Welfare Officer, Publication Section T. T. D., TIRUPATI. T

26, 28, 114, 122, 128, 129, 135, 222, 237, 244, 248, 429, 437, 713, 732, 742, 798, 840, 856, 860, 899, 1574, 1601, 1702, 1703, 1704, 1708, 1710, 1711, 1717, 1719, 1720, 1721, 1724, 1738, 1739, 1740, 1874, 2879, 2881, 2891 முதல் 2909, 2910 முதல் 2940, 2942 முதல் 2947, 2950, 2954, 2957, 2959, 2972, 3029.

வரரின்மீது சுமார் 30,000 கீர்த்தனைகளைப் புனைந்த பெரும் பக்தருமாக விளங்கிய ஸ்ரீ அன்னமாச்சார்யாரின் 478-வது நினைவு நாள் விழா திருப்பதியில், தி. தி. தே. 'அன்னமாச்சார்யா திட்டத்தின்' ஆதரவில் 2-4-81 முதல் 8-4-81 வரை ஏழு நாட்களுக்கு வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. 2-4-81 அன்று காலை, ஸ்ரீ அன்னமாச்சார்யாவின் தங்க விக்ரகம் ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவத்துடன், நகரின் முக்கிய வீதிகளில் திருவீதி வலம் மேற்கொள்ளப்பட்டது. அன்றுமாலை இந்நினைவு நாள் விழாவின் துவக்க விழா தி. தி. தே. நிர்வாகக் கட்டிட அரங்கில் நடைபெற்றது. திரு. பி. ரஜனி காந்த ராவ் அவர்களின் வரவேற்புரையைத் தொடர்ந்து, தி. தி. தே. ஸ்ரீ அன்னமாச்சார்யா திட்டங்களின் சிறப்பு அலுவலர்களான திரு. காமி செட்டி ஸ்ரீநிவாசலு மற்றும் திரு. கௌரி பெத்தி ராமசுப்ப சர்மா ஆகியோர் திட்டங்களின் ஆண்டறிக்கையினை வாசித்தனர். பின்னர் விழாவினைத் துவக்கி வைத்த, தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள், தன்னுடைய திறப்புரையில், அன்னமாச்சார்யா திட்டக் குழுவின் பணிகளைப்பற்றி விளக்கிப் பேசினார். பின்னர், அன்னமாச்சார்யா சந்ததியினர்க்குப் பொன்னுடைப் போர்த்தி கௌரவித்தார். அதனைத் தொடர்ந்து தி. தி. தேவஸ்தான ஆஸ்தான மிருதங்க வித்வானாக திரு. பாலக்காடு மணி ஐயர் அவர்களை நியமிக்கப்பட்டதை ஒட்டி, அன்னார் பொன்னுடை போர்த்தி கௌரவிக்கப்பட்டார். பின்னர் டாக்டர். முட்நூரி சங்கமேஸம் அவர்களும் கௌரவிக்கப்பட்டார். திரு. டி. பசுபதி அவர்களின் நன்றி நவிலலுடன் துவக்க விழா இனிது முடிந்தது. தொடர்ந்து தி. தி. தே. ஆஸ்தான வித்வான்களான திருமதி. எம். எல். வசந்தகுமாரி மற்றும் திரு. நூகல சின்ன சத்ய நாராயண ஆகியோரின் இன்னிசைக் கச்சேரிகள் நடைபெற்றன.

பிறகு அடுத்த நாள் முதற் கொண்டு 8-4-81 வரை 6 நாட்களின் போது காலையில் அன்னமாச்சார்யா கீர்த்தனைகளின் இலக்கிய நயம்பற்றி பல்வேறு தலைப்புகளில் உள்ளூர் மற்றும் வெளியூர் அறிஞர் பெருமக்களின் சொற்பொழிவுகளும், ஹரிகதா நிகழ்ச்சிகளும், மாலை நேரங்களில் திருவாளர்கள் சிட்டி பாபு, ராதா விஸ்வநாதன், நேது நூரி கிருஷ்ணமூர்த்தி, புதுக்கோட்டை ஆர். ராமநாதன், ஒலேட்டி வெங்கடேஸ்வரலு, பி. பி. சோமயாஜுலு, டாக்டர். ஸ்ரீபாத பிநாகபாணி, லால்குடி ஜெயராமன், டி. பசுபதி, கே. ஆர். கணபதி மற்றும் திருமதி. எம். எஸ். சுப்புலட்சுமி, திருமதி. ஸ்ரீரங்கம் கோபால ரத்னம், பி. கே. சுமித்ரா குஹா, சியாமளா, பி. சுசிலா ஆகியோர் உள்ளிட்ட மேலும் பல இசைக் கலைஞர்கள் பங்கேற்ற இன்னிசைக் கச்சேரிகள் நடைபெற்றன.

8-4-81 அன்று காலை, விழாவின் இறுதி நாள் நிகழ்ச்சிகள் வெகு சிறப்பாக நடை பெற்றது. விழாவிற்கு தி. தி. தே. செயலாட்சித் தலைவர் தலைமை வகிக்க, விழாவிற்கு சிறப்பு விருந்தினராக, ஆந்திர மாநில கலைத்துறை அமைச்சர் திரு.பாட்டம் ஸ்ரீ ராமமூர்த்தி அவர்கள் பங்கேற்று, தி. தி. தே. பிரசுரித்த அன்னமாச்சார்யா சிருங்கார சங்கீர்த்தனைகள் மற்றும் அன்னமாச்சார்யா ஸாகித்ய கௌமுதி எனும் தெலுங்கு நூல்களை வெளியிட்டு சிறப்புரை யாற்றுகையில், அமைச்சரவர்கள், தி. தி. தே. மேற்கொண்டு வரும் திட்டங்களை பாராட்டி, ஆந்திர அரசும், கலை நிகழ்ச்சிகளை மேற்கொள்ளும் பணிகளுக்கு தி. தி. தேவஸ்தானத்தை ஒரு வழிகாட்டியாக வைத்துக் கொள்ளும் என்று கூறி, அன்னமய்யா பாடல்களின் பெருமையைப் பரப்பும் வகையில், 'அன்னமய்யா செய்திச் சுருள்' எனும் திரைப்பட திட்டத்தையும் மேற்கொள்ளுதல் நலம் பயக்கும் என்று கூறினார். பின்னர் அன்னமய்ய திட்டத்தின் இசைக் கலைஞர்களின் இன்னிசைக் கச்சேரியுடன் இறுதி நாள் விழா இனிது முடிந்தது.

## பிரம்மோற்சவங்கள்

திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் நிர்வாகத்தில் உள்ள, ஸ்ரீ ராமானுஜரின் மேற்பார்வையில் கட்டப்பட்டதாகக் கூறப்படும், ஸ்ரீ ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி கோயிலின் இவ்வாண்டு பிரம்மோற்சவம் 11-4-81 முதல் 19-4-81 வரை கொண்டாடப்படும். 15-4-81 அன்று கருடசேவையும், 18-4-81 அன்று ரதோற்சவமும் வெகு சிறப்பாக நடைபெறும்.

ஸ்ரீபத்மாவதி தாயாரை ஸ்ரீவேங்கடேஸ்வரர் மணந்துகொண்ட இடமாகக் கூறப்படும், திருப்பதியிலிருந்து 25 மைல் தூரத்திலுள்ள நாராயணவனத்திலுள்ள ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் வருடாந்திர பிரம்மோற்சவம் 17-4-81 முதல் 25-4-81 வரை கொண்டாடப்படும். 21-4-81 அன்று கருடசேவையும், 24-4-81 அன்று ரதோற்சவமும் குறிப்பிடத்தகுந்தனவாக அமையும்.

எனவே பக்தர்கள் இவற்றினை ஒரு வாய்ப்பாகக் கொண்டு, இது போது திருப்பதிக்கும் நாராயணவனத்திற்கும் வருகைபுரிந்து இறைவனின் அருளைப் பெறுவார்களாகுக.



# ஸ்ரீ சங்கர ஜெயந்தி

*சுருதி ஸ்ம்ருதி புராணனும் ஆலயம் கருணலயம்*
*நமாமி பகவத்பாத சங்கரம் லோக சங்கரம்*

'ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதர் களின் ஜயந்தி, ஜயந்திகளுக்கெல் லாம் ஜயந்தி; உத்சவங்களுக்கெல் லாம் மேலான உத்சவம். இந்த ஜயந்தியைக் கொண்டாடினல், ராம நவமி, கிருஷ்ண ஜயந்தி, சிவராத்திரி முதலிய எல்லாவற்றின் பலனும் சித்திக்கும. சங்கர மடத்தைப் பேணி வளர்க்க ஆண் பெண் அனை வரும் ஏதாவது ஒரு கைங்கர்யத்தில் ஈடுபடவேண்டும்'' என்று காஞ்சி காமகோடி பெரியவர் அருளியிருக் கிருர்கள்.

சித்திரை மாதம் அமாவாசைக்குப் பிறகு சுக்லபட்ச பஞ்சமியில் சங்கர ஜயந்தி கொண்டாடப்படுகிறது. பல விதமான சித்தாந்தங்களும் சமயங் களும் மக்களைக் குழப்பிக் கொண் டிருந்த காலத்தில் ஸ்ரீ சங்கர பகவத் பாதர் தோன்றினர். அவர் எழுதிய நூல்களில் அவர் தம்மைப் பற்றிச் சொல்லிக் கொள்ளவில்லை. ஒரே ஒரு இடத்தில் மட்டும்தன்னை 'ஏக யோகி' என்று குறிப்பிட்டிருக்கிருர். பல வேற்றுமைகளைக் கொண்ட சூழ்நிலை யில் ஒரே முயற்சியை அடையவேண் டும் என்ற நிலையைக் குறிப்பது "ஏக யோகி''. ஹிந்துமதத்திலுள்ள எல்லா பிரிவுகளுக்கும் இறைவன் ஒன்றே என்கிற ஷண்மத ஸ்தாபனம் செய்து சமய ஒற்றுமையைத்தான் இந்த 'ஏகயோகி' ஏற்படுத்தினர். இது தான் ஆதிசங்கரர் செய்த என்றும் அழியாத பேருபகாரமாகும்.

ஈஸ்வரனின் அவதாரமே சங்கர பகவத் பாதர் என்பதற்கு ஏராள மான ஆதாரங்கள் உள்ளன. சௌந் தரிய லகரியில் பரமேஸ்வரனை 'லோக குரு' என்று சங்கரர் வருணித்திருக் கிருர். சங்கரரின் சிஷ்யர் இயற்றிய தோடகாஷ்டத்தில் ஆசார்யரே இறைவன் என்று குறிப்பிட்டிருக் கிருர்.

சங்கரருக்கும் மற்ற ஆச்சாரியார் களுக்கும் ஒரு முக்கியமான வித்தி யாசம் உண்டு. மற்ற ஆச்சாரியார் கள் குறிப்பிட்ட தெய்வங்களை வணங்கி அவர்கள் புகழைப் பாடி யிருக்கிருர்கள். ஆனல் சங்கர பகவத் பாதர் ஒருவர்தான் கற்பனை செய்யக் கூடிய எல்லா தெய்வங்களையும்பற்றி சுலோகங்கள் செய்துள்ளார்.

சங்கரர் காலத்தில் 72 மதப் பிரிவு கள் இருந்தன. இவைகளில் பல வற்றைத் தள்ளி சைவம், வைஷ்ண வம், காணபத்யம், சாக்தம், கௌ மாரம், ஸௌரம் என்ற ஆறே முக்கியமானவை என்று தீர்மானித்து அவற்றைப் பரப்பினர்.

**திரு. எஸ். நடராஜன் - சென்னை.**

அவர் இந்த உலகத்தில் வாழ்ந்ததே முப்பத்திரண்டு ஆண்டுகள்தான். இதில் எட்டு ஆண்டுகள் காலடியில் கழிந்துவிட்டன. மற்ற ஆண்டுகளில் அவர் கால்படாத இடமே இப்பாரத புண்ணிய பூமியில் கிடையாது.

அத்வைதம் என்னும் பிரும்ம வித் தையின் ஆதி குரு தட்சிணமூர்த்தி. பேசும் முதல் குரு நாராயணன். (கீதையை போதித்தார்)பிள்ளைக்குப் பிள்ளை வழியாக சிஷ்ய பரம்பரை உருவாயிற்று. நாராயணன் மகன் பிரும்மா, அவர் மகன் வசிஷ்டர், பராசரர், வியாசர், சுகர் என்று இப்படியாக குரு பரம்பரை அமைந் தது.

சுகர் பிரும்மசாரியாகவே இருந்து விட்டார். ஆகவே குரு பரம்பரை அவருடன் முடிந்து சிஷ்ய பரம்பரை ஆரம்பமாயிற்று. சுகரின் சிஷ்யர் கௌடபாதர். அவருடைய சிஷ்யர் கோவிந்தமுனி. அவருடைய சீடர் தான் சங்கரர்.

வியாசரின் பிரும்ம சூத்திரத்திற்கு சங்கரர் பாஷ்யம் செய்தார். அது மட்டுமின்றி தச உபநிஷத்துக்களுக் கும் அவர் உரை எழுதினர். மற்றும் கீதைக்கும் உரை எழுதியிருக்கிருர். இவைகளிலும் உபதேச சாகஸ்ரீ, விவேக சூடாமணி, பிரபோத சுதா கரம், ஆத்மபோதம், சதசுலோகி, மனீஷாபஞ்சகம் முதலியவற்றிலும் சங்கரர் வெகுபொருந்தமான வாதப் பிரதிவாதங்களால் அத்வைத உண் மையை விளக்கியிருக்கிருர். (பர மாத்மா வேறு, ஜீவாத்மா வேறு என்று கருதி உபாசித்தாலும் இறுதி யில் அத்வைதத்திற்கே கொண்டு செல்லும். விஞ்ஞானமும் அத்வை தத்திற்கு விரோதம் அல்ல)

ஈச்வர அபேதமான ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு ஆதியில் "ஜகத்குரு" என்ற பெயர் உண்டு. ஸ்ரீ கிருஷ்ணன் "பூர்வத்தில் இந்த யோகத்தை சூரி யனுக்கு உபதேசித்தேன். மீண்டும் இப்போது கிருஷ்ணனுக உபதேசிக்க வந்தேன். எந்தெந்தக் காலத்தில் தர்மம் மிகவும் க்ஷீணிக்கிறதோ அப் போதெல்லாம் வருவேன்'' என்ருர்.

ஸ்ரீ கிருஷ்ணவதாரம் துவாபர இறுதியில் நடந்தது. பிறகு கலியுகம் வந்தது. மறுபடியும் ஜீவ பிரம்ம அபேத யோகத்துக்கு நலிவு உண் டாயிற்று. எழுபத்திரண்டு துர்மதங் கள் தோன்றின. அவை மிகப் பயங் கரமாகக் கிளம்பின. அசந்தர்ப்ப மானவை எல்லாமே இப்படித்தான் ஆரம்பத்தில் தடபுடலாக இருக்கும், பிறகு இருந்த இடம் தெரியாமற் போகும்.

கலிகாலத்தில் இப்படி எழுபத்தி ரண்டு துர்மதங்கள் தோன்றி வைதீக

மதத்தை நலிவுற செய்வதைப் பரமேச்வரன் பார்த்தார். துவாபர யுகத்தில் ஏற்பட்ட நலிவு சாமானிய மானதுதான். எனவே ஏதோ சில சந்தர்ப்பங்களில் மட்டும் கிருஷ்ண பகவான் ஞானோபதேசம் செய்தால் போதுமானதாக இருந்தது. மற்றச் சமயங்களில் அவர் ஆயர்பாடியில் லீலை செய்தார்; துவாரகையில் ராஜ்ய பாரம் செய்தார். பஞ்சபாண்டவர்களுக்கு தூது போனார். கலிகாலத்தில் இப்படிச் செய்தால் போதாது. அதிக இருட்டு இருப்பதால் நிறைய விளக்கு வேண்டும். ஒரு வாழ்க்கை முழுவதும் ஞானோபதேசம் ஒன்றுக்காகவே அவதாரம் செய்ய வேண்டும் என்று பரமேசுவரன் எண்ணினார்.

சர்வ வித்தைகளுக்கும் நாயகனான அந்த சதாசிவனே ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதர்களாக அவதரித்தார். ஸ்ரீசங்கராசாரியர்கள் சிவாவதாரமே என்பதற்கு வேதத்திலேயே ஆதாரம் இருக்கிறது. ஸ்ரீ ருத்ரத்தில், 'கபர்த்திக்கு நமஸ்காரம், வ்யுப்த கேசனுக்கு நமஸ்காரம்' என்று அடுத்தடுத்து வருகிறது. 'கபர்த்தி' என்றால் 'ஜடாதாரி' என்று அர்த்தம். சிவ பெருமானை ஜடாதாரியாகவே பொதுவில் காண்கிறோம். 'வ்யுப்த' என்றால் 'வபனம் செய்து கொண்ட' என்று அர்த்தம். 'வ்வுப்த கேசன்' என்றால் தலையை முண்டனம் செய்து கொண்டவன் என்று பொருள். ஜடாதாரியானவர் 'வ்யுப்த கேச'ராக இருந்தது எப்போது? ஸ்ரீ ஆதி சங்கரராக இருந்தபோதே.

இந்திய சரித்திரத்திலேயே யாரும் செய்யத்துணியாத செயலாக அமைந்தது பகவத் பாதாளின் புனிதமான அத்வைதப் பிரசாரம்.

ஜம்புகேசுவரத்தில் அகிலாண்டேசுவரி அம்மனுக்கும், திருவொற்றியூரில் திரிபுரசுந்தரி அம்மனுக்கும் சங்கரர் யந்திர ஸ்தாபனங்கள் அமைத்து மாதாவின் அருளை எல்லாரும் பெற வழி செய்தார். சிதம்பரத்தில் யந்திரோதாரணத்தினால் மோட்ச லிங்கத்தையும் ஸ்தாபித்து காஞ்சி காமாட்சி சந்நிதியில் காமகோடி யந்திரப் பிரதிஷ்டை செய்தார்.

காஞ்சியிலுள்ள ஸ்ரீ பராசக்தி பீடத்தில் அவர் ஆரோஹணம் செய்ய தீர்மானித்தார். சரஸ்வதி தேவியும் இந்திரனும் தங்களுடைய பட்டங்களை அவரிடம் சமர்ப்பித்தார்கள். காஞ்சி காமகோடி பீடாதிபதிகளுக்கு இவ்விரு பட்டங்களும் உண்டு.

தனது முப்பத்திரண்டாம் ஆண்டில் மனித சரீரத்தை விட்டு ஸ்ரீ சங்கர பாதர் காஞ்சியிலேயே இறைவனுடன் ஐக்கியமானார்..

எத்தனை எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு பின்பும் அத்வைதம் மங்காத பொலிவுடன் விளங்குகிறது. சென்ற நூறு ஆண்டுகளில் மேனாட்டு அறிஞர்களின் கவனத்தைப் பெரிதும் கவர்ந்துள்ளது.

★

தொடர் கட்டுரை

# திருமாலின் திரு அவதாரங்கள்

குணமில்லேன் நலமில்லேன் கோடரி
யால் குறை களையும் பரசு ராமா!
கணமேனும் பெருஞானம் தரும்
நூலைக் கற்பதற்கு மனமு மிலலேன்!
குணமுடைய பெரியோரைக் கூடுதற்குத்
திறனில்லேன் கொடியேன் மூடக்
குணத்தாலே அழியுங்கால் எதிர்வந்து
தீக்குணத்தை மாற்றி யருளே!
—மாருதிதாசன்.

திருமாலின் திரு அவதாரங்கள் காரண காரியத்தோடு கூடியவை.



மக்களுக்கு நல்லறிவைப் புகட்ட எழுந்தவை.

மக்கட் சமுதாயம் மகிழ்ச்சியாக வாழ வேண்டுமானால், மக்கள் அனைவரிடமும் கீழ்ப்படிதல் என்னும் உயர்பண்பு அமைந்திருத்தல் வேண்டும். மகனாகப் பிறந்தவன் தாய் தந்தையர்க்குப் பணிந்து நடக்க வேண்டும். கண்ணெனத்தகும் கல்வியைக்கற்றுத்தரும் ஆசிரியரைக் கடவுளாகப் பாவித்து வணங்க வேண்டும். அறிவிலும் ஆற்றறிலும் மிகுந்த சான்றோரிடம் அடக்க ஒடுக்கமாக நடந்து கொள்ள வேண்டும். இவ்வாறு பணிவுடன் நடந்து கொள்பவருடைய மனம் அடையும் அமைதிக்கும் ஆனந்தத்துக்கும் அளவே இருக்காது.

சரியா? தவறா? என்று கேள்வி கேட்காமல் 'மூத்தோர் சொல் வார்த்தை"அமிர்தம்"என்று ஏற்றுக் கொள்ள வேண்டும். இந்தக்கருத்தினை வலியுறுத்த எழுந்த அவதாரமே பரசுராம அவதாரம். இத்திரு அவதாரம் பற்றி இனிக் காண்போம்:

முன்பொரு காலத்தில் இருசிகன் என்ற பெயருடைய முனிவர் ஒருவர் வாழ்ந்துவந்தார். அவர்காலத்தில் காதி என்ற பெயருடைய மன்னன் ஒருவன் ஆட்சி புரிந்து வந்தான். அம்மன்னனுக்குச் சத்தியவதி என்றொரு மகள் இருந்தாள். மன்னன் மகளாகிய சத்தியவதியை மணந்து கொள்ள முனிவருக்கு எண்ணம் பிறந்தது. எனவே, மன்னனிடம் சென்று மகளைத் தருமாறு கேட்டார். ஆயிரம் குதிரைகளைக் கொடுத்தால் தன் மகளைத் தருவதாக மன்னன் கூறினன்.

முனிவர் என்ன செய்வார்?பாவம்! ஒருகணம் சிந்தித்தார். வருண பகவானை நினைத்தார். வருணபகவான் முனிவர் எதிரே தோன்றினர். வருண பகவானை முனிவர் வணங்கினர். தன் மனக்குறையைத் தெரிவித்தார். வருணபகவான் முனிவருக்கு ஆயிரம் குதிரைகளைஅன்பளிப்பாகக் கொடுத்தார். தான் பெற்ற ஆயிரம் குதிரைகளையும்மன்னனுக்குமுனிவர்கொடுத்தார். மன்னனும் தன் மகளை மகிழ்வுடன் முனிவருக்குத் திருமணம் செய்து கொடுத்தான்.

இருசிக முனிவரும் சத்தியவதியும் அன்புடன்இல்லறம் நடத்திவந்தனர். கொஞ்சிக் குலவிடத் தனக்கொரு குழந்தை இல்லையே என்று சத்தியவதி ஏங்கினள். எதைப் பெற்றாலும் பெற்றோர் என்று பெயர் பெறுவதில்லையே! குழந்தையைப் பெற்றவர்களைத்தானே பெற்றோர் என்று பெயரிட்டு அழைக்கின்றனர்.

பொன்னுடைய ரேனும் புகழுடைய
ரேனும்மற்
றென்னுடைய ரேனும் உடையரோ—
இன்னடிசில்
புக்களையும் தாமரைப்பூக் கைந்நாறும்
செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர்,

முனிவர் மனைவிக்கும் குழந்தை மேல்ஆசை பிறந்துவிட்டது."கடந்த ஞானியரும் கடப்பரோ மக்கள் மேல் காதல்!" என்று கம்பநாட்டாழ் வாரும் கனிமழலைச் செல்வத்தின் சிறப்பைக் கவினுறப் பாடியுள்ளாரன்றோ!

புலவர். மா. சிதாராமன் M.A., B.Ed.
பெருங்கட்டூர்.

தனக்கு நல்லதோர் ஆண்மகவு பிறக்கவேண்டும் என்ற அவாவினைச் சத்தியவதி முனிவரிடம் எடுத்துரைத்தாள். தன் மனைவியின் விருப்பத்தை நிறைவேற்றி வைப்பதாக முனிவர் கூறினர். அத்துடன் தன் மாமியார்க்கும் ஆண்மக வில்லாக் குறையைப் போக்க எண்ணங் கொண்டார். எனவே, தன் மாமியாருக்கும் தன்மனைவிக்குமென்று இருவகைப் பாயசத்தை அளித்தார். சத்தியவதி அருந்த வேண்டிய பாயசத்தைச்

சத்தியவதியின் தாயும், தாய் அருந்த வேண்டிய பாயசத்தை மகளுமாக மாறி அருந்தினர். இதையறிந்த இருசிக முனிவர் கூறலானார்:

“என் அன்புக்குரிய சத்தியவதி! உனக்கென்று கொடுத்த பாயசத்தை உன் தாய்க்கு அளித்து விட்டாய்! உன் தாய் அருந்த வேண்டியதை நீ அருந்திவிட்டாய்! பாயசம் மாறியதால் உங்களுக்குப் பிறக்கும் குழந்தைகளின் தன்மையும் மாறுபட்டே இருக்கும். அரசன் மனைவியான உன் தாய்க்குச் சாந்தமான குழந்தை பிறக்கும்! முனிபத்தினியாகிய உனக்கோ கோபம் மிக்க க்ஷத்திரியக் குழந்தையே பிறக்கும்!”

இவ்வாறு இருசிக முனிவர் கூறக் கேட்ட சத்தியவதி மனம் நடுங்கினுள். தனக்குப்பிறக்கப் போகும் குழந்தையும் அறிவுமிக்க அமைதியான குழந்தையாகவே இருக்க வேண்டும் என முனிவரை வேண்டிக் கொண்டாள். ‘அப்படியே ஆகட்டும்!’ என்று முனிவரும் அருள் புரிந்தார்.

முனிவர் அருள் புரிந்தவாறே சத்தியவதிக்கு நல்லதோர் ஆண்மகவு பிறந்தது. அக்குழந்தைக்கு ஜமதக்னி எனப் பெயரிட்டனர். சத்தியவதியின் தாய்க்கும் ஆண்மகவொன்று பிறந்தது. அக் குழந்தைக்குக் கோசிகன் எனப் பெயரிட்டனர்.

ஜமதக்னிக்குத் திருமணப்பருவம் நெருங்கியது. ரேணுகை என்னும் மங்கை நல்லாளுக்கும் ஜமதக்னிக்கும் திருமணம் நடைபெற்றது. நாளடைவில் நன்மக்கள் சிலர் பிறந்தனர். பின்னர், ரேணுகாதேவியின் திருவயிற்றில், பூமி பாரம் நீங்கும் பொருட்டுத் திருமால் பரசுராமராகத் திரு அவதாரம் செய்தார்.

பரசுராமர் அவதரித்த காலத்தில், சந்திரகுல மன்னனை கார்த்த வீரியன் என்பவன் அரசாண்டு வந்தான். அவன் தன் இளமைப் பருவத்தில் அத்திரி என்னும் முனிவருடைய குமாரன் ஒருவனிடம் சென்றான். தனக்கு ஆயிரம் கைகள் வேண்டும் என்று வேண்டிக் கொண்டான். அத்திரியின் புதல்வன் அருளால் அந்த அரசனுக்கு ஆயிரம் கைகள் தோன்றின. எனவே, கார்த்த வீரியன் அளவிலா ஆற்றல் மிக்கவனாக விளங்கினான்.

ஒருநாள், கார்த்தவீரியன் தன் மனைவியர் புடைசூழ நருமதை என்னும் ஆற்றில் நீராடிக் கொண்டிருந்தான். அப்போது, அந்த ஆற்றங் கரையில் இலங்கை வேந்தனாகிய இராவணன் தங்கியிருந்தான். ஆயிரம் கைகளால் நீரைக்குடைந்து குடைந்து ஆடியதால், கரைபுரண்ட வெள்ளம் கரையிலிருந்தஇராவணனை நனைத்தது. நீரால் நனைந்த இராவணன் வெகுண்டான். காரணத்தை உணர்ந்து கொண்டான். கார்த்த வீரியன் மேல் போருக்குச் சென்றான்.

கார்த்த வீரியனுக்கும் இராவணனுக்கும் கடும் போர் நிகழ்ந்தது. ஆயிரம் கைகளைப் படைத்த கார்த்த வீரியன் பத்துத்தலை இராவணனைத் தன்கைகளால்பற்றித்தூக்கிக்கொண்டான். குரங்கினைப் பிடித்தாட்டும் குரங்காட்டியைப் போல, இராவணனைக் கார்த்த வீரியன் ஆட்டம் காட்டிக் கொண்டிருந்தான்.

இராவணன் பிடிபட்ட செய்தி புலத்தியனுக்கு எட்டியது. புலத்தியன் இராவணனுடைய பாட்டன். தக்க உபாயத்தால் இராவணனை மீட்கப் புலத்தியன் எண்ணங் கொண்டான். போரிட்டு மீட்க முடியாது என அறிந்தான். எனவே, கார்த்த வீரியனிடம் சென்ற புலத்தியன் அவன் வீரத்தைப் பலபடப் புகழ்ந்தான். புகழுரையில் மயங்கிய கார்த்த வீரியன் இராவணனை விடுவித்துவிட்டான். புலத்தியன் இராவணனுடன் இலங்கை மீண்டான்.

இலங்கை வேந்தனையே படாத பாடு படுத்திய கார்த்த வீரியனுக்கு மற்ற அரசர்கள் எம்மாத்திரம்? மூவுலகையும் அவன் ஆட்சியின் கீழ் கொண்டு வந்து விட்டான்.

ஒருநாள் வேட்டையாடும் பொருட்டுக் கார்த்த வீரியன் வனம் ஒன்றுக்குச் சென்றான். வேட்டையாடிக் களைத்தபின் அங்கிருந்த பரணசாலை ஒன்றையடைந்தான். அந்தப்பர்ணசாலை ஜமதக்னி முனிவருடையது. மன்னன் வருகை யுணர்ந்த முனிவர் காமதேனுவை நெஞ்சில் நினைத்தார். மன்னனுக்கும், அவன் பரிவாரங்கட்கும் அறுசுவை உண்டியைக் காமதேனு அன்புடன் அளித்தது. காமதேனுவின் ஆற்றலைக் கண்ட கார்த்த வீரியன் அதனை அபகரிக்கத் திட்டம் போட்டான். உண்ட வீட்டுக்குத் துரோகம் செய்த பாவியானன். காமதேனுவைக் கட்டியிழுத்துக் கொண்டு போய்விட்டான்.

காமதேனுவைக் கவர்ந்து போன செய்தியை அறிந்தார் பரசுராமர். கையில் பரசுவைப்பற்றிக் கொண்டார். வில்லும் அம்பும் தாங்கினர். மன்னன் நாடு நோக்கி விரைந்து சென்றார். பரசுராமர் வருகையைக் கார்த்த வீரியனின் படைகள் அறிந்தன. நால்வகைப் படைகளும் பரசுராமரைத் தாக்கின. ஆனல், பரசுராமரோ எதற்கும் கலங்கவில்லை. தனியொருவராகவே இருந்து நால்வகைப் படைகளையும் நடுங்கச் செய்தார். கார்த்த வீரியனின் மைந்தர் பலரும் பரசுராமரின் அம்புக்குப் பலியாயினர்.

தன் மக்கள் மாண்டுபோன செய்தியினை மன்னன் கேட்டறிந்தான். அவன் கண்கள் கனலைக் கக்கின. ஐந்துநூறு கைகளில் விற்களையும், ஐந்துநூறு கைகளில் அம்புகளையும் பற்றிக் கொண்டான். விரைந்து செல்லும்தேரொன்றின்மேல் ஏறிக்கொண்டான். பரசுராமரை எதிர்த்துப் பயங்கரமாகப் போர் தொடுத்தான். ஆனல், சற்று நேரத்திற்கெல்லாம்

(35-ம் பக்கம் பார்க்க)

# தர்ப்பையின் மஹத்வம்

நம் தேசத்தில் நம் முன்னோர்கள் ஒவ்வொரு சிறு பொருளினுடைய குண தோஷங்களையும் பற்றி நன்காராய்ந்து தக்கபடி உபயோகப்படுத்தி அதன்படி அனுஷ்டித்து வந்தும், பின் ஸந்ததியார்களும் க்ஷேம லாபங்களை யடைய வேண்டி அறநூல்களை எழுதி வைத்துமிருக்கிறார்கள். நன்கு விசாரணை செய்தால் இது புலப்படும். நாம் அவர்கள் கண்டு பிடித்திருப்பதை உணராமலிருப்பதின் பயனாக, அவைகளில் சிலவற்றில் அசிரத்தையாயிருந்து அதனால் ஏற்படும் பயனை அடையாமல் போகிறோம்.

உதாரணமாகத் தர்ப்பைப் புல்லை எடுத்துக்கொள்வோம். இதனை நம் மூதாதையர்களும் ரிஷிகளும் அளவிலடங்காத ஆற்றலுடைய பொருளென மதித்திருக்கிறார்கள். கைலாஸத்திற்குச் சென்ற ரிஷி கணங்கள் பார்வதி - பரமேச்வரர் கல்யாண வைபவத்தைக் கண்டு ஆனந்தித்து, ஸ்ரீ பரமேச்வரனால் யதேஷ்டமாக அனுக்ரஹிக்கப்பட்ட தங்கம் முதலான பொருள்களைப் பெற்றுக் கொண்டு திரும்பும்போது கங்காதீரம் வந்து சேர்ந்தார்கள். அங்கே கங்காதீரத்தின் இரு கரைகளிலும் செழுமையாய் அடர்ந்து வளர்ந்து தழைத்தோங்கியிருந்த குசங்களைக் (தர்ப்பத்தில் ஒரு வகை) கண்ணுற்றார்கள். அவ்வளவுதான்! கையிலுள்ள தங்கக் கட்டிகளைக் கீழே எறிந்துவிட்டு தங்கள் சக்திக்கேற்றவாறு குசங்களை அறுத்துக் கட்டாகக் கட்டித் தலையில் சுமந்து வந்தார்களாம். அதாவது தங்களுடைய நித்யமான சுபாசுப கர்மாக்களுக்கும் யக்ஞ யாகாதிகளுக்கும் மிக அவச்யமானதும் ச்ரேஷ்டமானதுமான பொருள் என்ற தாத்பர்யத்தைக் கொண்டே அப்படிச் செய்தார்கள். உலகத்தில் இக்காலத்தில் பணம், தங்கம் இவைகளில் ஜனங்கள் எவ்வளவு மதிப்பு வைத்திருக்கிறார்களோ அவ்வளவுக்கும் அதிகமாகத் தங்களுக்கு சாஸ்திர விஹிதமான ச்ரேயோ மார்க்கத்திற்கு உரிய பொருள் என்கிற முறையில் விசேஷ நம்பிக்கையுடன் அந்தக் குசங்களை எடுத்து வந்திருக்க வேண்டும் என்று புலனாகிறது.

தர்ப்பை மூன்று தோஷங்களையும் போக்கும் அக்நி போன்றது. தந்வந்திரி வைத்தியத்தில் ஸந்நிபாத ஜுரத்தில் கடைசி முறையாக நாணல் கஷாயமிட்டு அளிக்கச் சொல்கிறார். தர்ப்பை பசுமையுள்ள பொழுதும் மிக வேகத்துடன் எரிந்து போகும் இயல்புடன் கூடியது. அத்துடன் அக்னிக்கும் தர்ப்பைக்கும் பாஹி என்கிற ஒரே பெயரிடப் பெற்றிருக்கிறது. தர்ப்பையில் மின்சாரம் செல்லும் தன்மை அமைந்துள்ளது. இதனால் இதனைப் பொருளியலறிந்த புண்ணிய புருஷர்கள்—நாபீ ஸந்தான கிரியைகளிலும், அநவாரம்ப கிரியைகளிலும், மற்றும் அபிமந்திரண கிரியைகளிலும் உபயோகிக்கின்றார்கள்.

தேவாலயங்களில் ஸம்புரோக்ஷண காலத்தில் தங்கம் வெள்ளி உபயோகிக்க வேண்டிய இடங்களில் தர்ப்பைக் கயிற்றை உபயோகிக்கிறார்கள். அநாமிக என்னும் பவித்திர விரலிலும் தர்ப்பைப் பவித்திரம் அல்லது பொன் பவித்திரம் தரிக்க வேண்டுமென்று விதித்திருக்கிறது. அவ்விரல் கபநாடி முற்றுப்பெறும் இடமானதால், தர்ப்பை அவ்விடம் ஸம்பந்திப்பதனால் கபங்களைச் சுத்தி செய்து, சுவாசக் குழாய்கள் வேலைக்குதவும்படி வழிசெய்து வைக்கிறது.

தர்ப்பை, நீரிலுள்ள அழுக்கை - மலத்தைப் போக்கி நிர்மலமாக்கும் தன்மையுடையது. ஆற்றில் வெள்ளம் கரை இடியும்படி பெருகி வந்தால், பிரவாஹம் நாணற் புதரிலே தங்கும்போது உடனே தெளிந்து போவதையும், வண்டலெல்லாம் நாணலடியில் தானே படிந்து விடுவதையும் காணலாம். நாணல் துண்டுகளைக் களிமண் கரைத்தத் தண்ணீரில் விட்டால் அந்த நீர் தெளிந்துவிடும். இன்றும் நாணலின் சாம்பலைக் கொண்டு தாம்பிரம் முதலிய உலோகங்களைத் தேய்த்தால் அவற்றிலுள்ள களிம்பு விரைவில் விலகும். இதில் காரமும், புளிப்புமிருப்பதே காரணம். ஆகவேதான் இச்சாம்பலையே விக்ரஹங்களைத் தேய்ப்பதற்கு உபயோகிக்கும்படி சிற்ப சாஸ்திரம் போதிக்கின்றது. நாணலைக் கொளுத்தித் தண்ணீரிலிட்டு அதில் வெள்ளி முதலிய லோகங்களை ஊற வைத்துத் தேய்த்தால் அவற்றின் அழுக்குக் கழிவதைக் கண்கூடாகக் காணலாம்.

இதன் சாம்பல் மற்றைய சாம்பல்களைப்போல் ஸாமான்யமன்று. இச்சாம்பல் நாவில் பட்டால் கழுத்து வரையில் புண்ணுண்டாகி வெந்து விடும். இக்காரத்தை ரணங்களில் இட்டால் அதை அழுகச் செய்யும். ஆற்றுமுள்ளி கலிங்கம் முதலிய பூண்டுகளைப்போல் தண்ணீரின்மையால் வாடாமலும், தண்ணீர் பெருகுவதால் அழுகாமலும் வளரும் ஸ்வபாவமுள்ளது. சீதளம், உஷ்ணம் இரண்டும் சமமாகவுள்ள பிரதேசங்களில் விருத்தியாகும்.

அமாவாஸ்யை அன்று அறுக்கப்படும் தர்ப்பைகளுக்கு வீர்யமதிகம். பவித்திரத்தால் சுத்தி செய்யப்பெற்ற நீரையே கர்மாதோறும் உபயோகிக்கும்படி அறநூல் கூறுகிறது. பஞ்சகவ்யத்துடன் குசோதகத்தையும் சேர்ப்பது வழக்கம். ஜலாசயத்தைச் சுற்றி நாணலிருந்தால் அதன் காற்று ஆரோக்கியமாகுமென வைத்திய சாஸ்திரம் கூறுகிறது. ஆரோக்கிய நூல் சொல்படி தென் மேற்கில் ஒரு குளம் அமைத்து, அதைச் சுற்றிலும் நாணல் வைக்கவிதியேற்பட்டுள்ளது. வட கிழக்குத் திசையிலிருந்து தென் மேற்கு நோக்கிப் பூமியின் பேராற்றல் செல்வதால் ஆரோக்யத்திற்கு உகந்ததாகும். இவ்வாறு பெரியோர்கள் ஏற்படுத்தியிருக்கிற திட்டம் யாவும் ஆராய்ந்தால் உண்மை தத்வம் விளங்கும்.

நன்றி: ஸ்ரீ காமகோடி ப்ரதீபம்.

தொடர் கட்டுரை :

# கீதை காட்டும் நல்வழி

## பக்தி யோகம்

**அத்தியாயம்-12**

பகுதி — 9

பகவானுக்குப் பிரியமான பக்தன் எப்படி இருப்பான்? அவன் சூரியன், சந்திரன் மற்றும் நதியைப் போன்று இருப்பான். இவன் தீயவன் அவன் நல்லவன், இது நல்ல நஞ்செய் நிலம் அது கொடும் பாலை நிலம், இது காட்டுப் பகுதி, அது நாட்டுப்பகுதி என்றெல்லாமா பார்த்தா சூரியன் தன் கிரணங்களை வீசுகிறான்? அல்லவே. இவன் படித்தவன், இவன் படிக்காதவன், இவன் குருடன் அவன் நல்ல கண்ணன், இவன் அழகன், அவன் குரூபி என்றெல்லாமா பார்த்து, சந்திரன் தன்தன் கிரணங்களை அள்ளி அள்ளி வீசுகிறான்? அல்லவே. நதி நீரைப் புலியும் குடிக்கிறது. பசுவும் குடிக்கிறது. வேறுபாடின்றித் தத்தம் கடமையைச் செய்யும் இவற்றைப் போல பக்தனும் அனைவரிடத்தும் சமதிருஷ்டியைக் கொண்டு விளங்குவான்.

ஸததம் ஸந்துஷ்ட: 'ஸந்தோஷம்' அல்லது திருப்தி என்பது இறைவனது பிரஸாதமாகும். இன்று நம்மில் பெரும்பாலாரிடம் மன அமைதி இல்லாததற்குக் காரணம் 'போதும் என்ற மனம்' இல்லாததுவேயாகும். எவ்வளவு வந்தாலும் 'இனியும்வேண்டும்' என்ற ஆசைக்கு நாம் மனத்தில் இடம் கொடுத்து விட்டால், பின்னர் நம் வாழ்க்கை நரக வாழ்க்கைதான். பங்களா இருந்தும் பணம் மற்றும் நிலபுலன்கள் இருந்தும் நம்மில் எத்தனை பேர் 'இல்லை, இல்லை' என்ற பிச்சைக்கார வாழ்வு வாழ்கிறோம்? இது எதனால்? நம்மிடம் 'திருப்தி' இல்லாததால். மாறாக பக்தன் 'ஸததம் ஸந்துஷ்ட: யாண்டும் திருப்தியுடையவனாக திகழ்கிறான். தான் இப்பொழுது பெறுவது அனைத்தும் தனது பூர்வ ஜன்ம கர்மத்திற்கு ஏற்பவே என்றும், தன்னைப் படைத்துக் காத்து ரட்சிப்பது எல்லாம் வல்ல பரம் பொருளே என்றும் அவனுக்குத் திடமான நம்பிக்கை உண்டு.

தவிர பக்தனுக்கு அழியும் உலகப் பொருள்களில் சிறிதும் நாட்டம் கிடையாது. உலகப் பொருள்கள் அனைத்தும் தோன்றி மறையும் இயல்பு உடையவை. எனவே அவற்றால் பெறப்படும் இன்பமும் அந்த இயல்பினதேயாகும். மாறாக பக்தனது இலட்சியம் அனைத்தும் அழியாப் பரம்பொருளாகிய இறைவன் மீதேபதிந்திருப்பதால் அவன்பெறும் இன்பமும் வற்றாத, மறையாத தன்மையதாகும்.

சமுத்திரம் எப்பொழுதும் நிறைவுடன் இருப்பது போல பக்தனது இதயமும் சதா நிறைவுடன் திகழ்கிறது. ஏனெனில் தேவைகளும் ஆசைகளும் அற்ற மனம் அது. குறைவு அற்ற இடத்தில் நிறைவு தானே இருக்கமுடியும்! கிடைப்பது குறைவோ அதிகமோ எதுவும் அவனது மன அமைதியைக் குலைப்பதில்லை. பொருள் இருந்தாலும் இல்லாவிடினும் அவனது மனத்தில் ஆனந்தம் யாண்டும் பொங்கி வழிகிறது. எதற்கும் அவன் முணுமுணுப்பதில்லை. பிறரிடம் அவன் குற்றம் குறை காணபதில்லை. நேரிய பார்வையுடையவனுக்குக் குறை என்பது எங்குமே தென்படாது. என் மனத்தில் கோணல் இருந்தால் அது உலகப் பொருள்களில், பிறரிடத்தில் பிரதிபலிக்கிறது. அவ்வளவு தான் நான் என்னைத் திருத்திக் கொண்டால் சமூகம் தானாகத் திருந்தி விடும்.

'யதிருச்சா லாப ஸந்துஷ்ட:' — 'கிடைத்ததைக் கொண்டு திருப்தி அடைபவன்' பக்தன். லட்சரூபாய் லாபமும், லட்சரூபாய் நஷ்டமும் ஒன்றே. 'சிவன் தந்தது இச் செல்வம்' என்னும் பாங்கில் பக்தன் இறைவன் தனக்குத் தந்த சொத்திற்கும் செல்வத்திற்கும் வெறும் டிரஸ்டிஅல்லது தர்மகர்த்தா போலத் தன்னைக் கருதுகிறான். 'கொடுத்தவன் எடுத்துக் கொண்டால் அது பற்றி எனக்கு என்ன கவலை?' என்னும் உயரிய பற்றற்ற நிலையில் அவன் வாழ்கிறான்.


திரு. டி. கே. நாராயணன், M.Sc.
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.


யோகீ: யாண்டும் ஸமத்வ மனநிலையில் இருப்பவன். வாழ்க்கையில் புலன் அடக்கமும், மன ஒருமைப் பாடும் உள்ளவன் யோகியாவான். ஒரு சமயமும் புலன்கள் அவனை ஏமாற்ற முடியாது. ஏனெனில் அவன் சதா விழிப்புணர்ச்சியுடன் இருக்கிறான்.

## சுவாமிஜியுடன் ஓர் அன்பர்

**அன்பர் :** ஆண்டவன் எவ்வளவு சோதனையைக் கொடுத்திருக்கிறான்?

**சுவாமிஜி :** ஆமாம்! வண்ணான் எதற்குத் துவைக்கிறான்?

**அன்பர் :** துணி வெளுக்க!

**சுவாமிஜி :** வெளுக்கத்தானா? அல்லது துணியைக் கிழிக்கவோ......தன் பலத்தைக் காட்டவோ...?

**அன்பர் :** வெளிக்கத்தானே துவைப்பான்!

**சுவாமிஜி :** அது போலத்தான் இறைவனாகிய வண்ணான் உயிர்களாகிய துணியை உலக கிரியைகளாகிய கல்லில் அடித்து காம, க்ரோதாதி அழுக்குகளைக்களைந்து ஞானமாகிய வெண்மையினை உருவாக்குகிறான்.

யதாத்மா: எவனது மனமும் இந்திரியங்களும் அடக்கப்பட்டு விட்டனவோ அவன் 'யதாத்மா' ஆகிறான். இத்தகைய பகவானுக்கும் பிரியமான ஞானி பக்தர்கள் தங்கள்மனம் மற்றும் இந்திரியங்களை சதா தங்கள் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்கிறார்கள். எனவே அவர்கள் வாழ்க்கையில் தகாதது என்றோ இன்னாதது என்றோ எதுவும் நிகழ வாய்ப்பில்லை.

த்ருடநிஸ்சய: உறுதியான புத்தியுடையவன். பாரமார்த்திக விஷயத்தில் பக்தனுக்கு எந்தவித சலனமும் இடையாது. உலகமே எதிர்த்து வரினும் தான் கொண்ட கொள்கை சரியானதே என்பது அவனது நிலை. கொண்டவன் பக்தன். அவனே பகவானுக்குப் பிரியமானவன்.

மய்யர்ப்பித மனோபுத்தி: மனம், புத்தியை என்னிடம் அர்ப்பணித்தவன்'! 'இறைவா! என்னுடையது என்று சொல்வதற்கு என்னிடம் என்ன இருக்கிறது? எல்லாம் உன்னுடையது. யோகத்தால் நான் பெற்ற தெளிந்த மனமும் அறிவும் உன்னுடையதே. அதை நான் உனக்கே அர்ப்பணிக்கிறேன்', என்று தன்னையே இறைவனுக்கு 'ஆத்ம நிவேதனம்' பண்ணுகிறவன் உண்மை பக்தன்.

நாம் சமர்ப்பிக்கும் சொத்துக்களையும் விலையுயர்ந்த பொருள்களை



இடுக்கண்களும் இன்னல்களும் மலை மலையாக வந்து தாக்கிடினும், தனது நிலை குலைந்து போகாமல், 'இறைவா இதுவும் உன் திருவிளையாடலோ?' என்று மன உறுதியுடன் அவற்றைச் சமாளித்து நிற்பான். ஆன்மீக வாழ்க்கையில் முன்னேற்றத்தின் அடிப்படை தான் கொண்ட கொள்கையில் உறுதியேயாகும். உற்றார் நண்பர்கள் எள்ளி நகையாடினாலும் அதைக் கொஞ்சமும் பொருட்படுத்தாது பிரஹ்லாதனைப் போல, மீராவைப் போல இறைவனிடம் மாறாத காதல் யும் இறைவன் கொஞ்சமும் மதிப்பதில்லை. அவன் பால் காதலாகிக் கசிந்து எவன் கண்ணீர் மல்குகிறானோ அவனது அன்பெனும் பிடியில் அகப்படும் மலை அவன். பக்தியும் அன்பு மற்ற மனம் வரண்ட பாலைவனத்திற்கு நிகர். இறைவன் மாட்டு அனன்ய பக்தி எவனிடம் இல்லையோ அவன் கொடுக்கும் பொருள் எவ்வளவு தான் விலையுயர்ந்ததாக இருப்பினும் அதை இறைவன் ஏற்பதில்லை என்பது சான்றோர்களது கருத்தாகும்.

மேலும் எத்தகையவர்கள் பகவானுக்குப் பிரியமானவர்கள்?

யஸ்மான்னோத்விஜதே, லோகோ
லோகான்னோத்விஜதே ச ய: |
ஹர்ஷாமர்ஷ பயோத்வேகைர்
முக்தோ ய: ஸ ச மே ப்ரிய: ||15||

'எவனிடமிருந்து உலகுக்கு இன்னல் இல்லையோ, யார் உலகத்தினின்று இடர்ப்படுவதில்லையோ, எவன் களிப்பு, கோபம், அச்சம், கலக்கம் ஆகியவற்றிலிருந்து விடுபட்டவரோ அவன் எனக்குப் பிரியமானவன்'.

பிரம்ம ஞானியாகிய பக்தன் தனது எண்ணம், சொல், செயல் ஆகியவற்றால் எந்த உயிருக்கும் தீங்கை விளைவிப்பது கிடையாது. எனவே அவனால் எதற்கும் துன்பம் ஏற்படாது என்பது எதுவும் அவனைத் துன்புறுத்தவோ, தீங்கு விளைவிக்கவோ செய்யாது. எங்கும் இறைவன் உள்ளான் என்ற எண்ணத்தில் பக்தன் ஊறியிருப்பதால் தீய எண்ணம் அவன் மனத்தில் தோன்ற வழியே இல்லாது போய்விடுகிறது. பாம்பையும் அவன் பகவானாகப் பார்க்கிறான். அந்தப் பாம்பும் இவனை வணங்கிச் செல்கிறது. பாம்பைப் பகவானாகக் கருதி நம் வீட்டுப் பெண்கள் ஆலயங்களில் பாம்புப் புற்றிற்கு பால் வார்ப்பது நாம் அன்றாடம் காணும் காட்சி தானே! உலகத்தில் எதுவுமே நமக்குத் தீங்கு செய்யாது. எப்பொழுது? நாம் அவற்றிடம் திலங்கும் பகவத் சொருபத்தைக் காணும் திறத்தை வளர்த்துக் கொண்டு விட்டால். படமெடுக்கும் பாம்பு நம் மடியில் தவழ்ந்து விளையாடும்.

'தன்னால்உலகுக்குத் தீங்கு இல்லை, உலகத்தால் தனக்குத் தீங்கு இல்லை' என்பது மிக உயர்ந்த நிலையாகும். இந்த வாக்கியத்தில் முற்பகுதியைப் பொறுத்த மட்டில் எங்கும் எதிலும் பகவானைக் காணும் திறம் படைத்த பக்தனால் உலகிற்கு எந்த விதத் தீங்கும் இல்லை என்பதை நாம்

ஒத்துக் கொண்டாலும், உலகத்தால் பக்தர்களுக்கு எத்தனை எத்தனை இன்னல்கள் இழைக்கப்பட்டுள்ளன? மீராவை சந்தேகித்த அவளது கணவன் தாயைக் கொண்டே அவளுக்கு விஷத்தை அளித்தானே? அது இடர் இல்லையா? பிரஹ்லாதனை அவனது தந்தை ஹிரண்யகசிபு மலையிலிருந்து உருட்டச் செய்தானே, யானையின் கால்களில் இடரச் செய்தானே? இவையெல்லாம்இடர்கள் இல்லையா? இறைவனிடம் பக்தி கொண்ட ஏசுநாதரை மக்கள் ஆணியால் சிலுவையில் அறைந்தனரே! அது இடர் இல்லையா? சத்சங்கத்தின் போது கோடாரியால் கொடியவன் ஒருவன் கோடரி கொண்டு ஸ்ரீ சுவாமி சிவானந்தரை மும்முறை தாக்கினானே, அது இடர் இல்லையா? ஆசிரமத்தில் திருடர்கள் பொருள்களைத் திருடிச் சென்றதைப் பார்த்து அவர்களுக்கு உதவி செய்யத் தயாராயிருந்த ரமணரைத் தொடையில் ஓங்கி அடித்தார்களே அந்தத்திருடர்கள்! அது இடர் இல்லையா? பக்தர்களுக்கு என்னவெல்லாம் சோதனைகள் ஏற்பட்டிருக்கின்றன! அப்படியாயின் 'உலகத்திடமிருந்து எவன் இடர்ப்படுவதில்லையோ அவனே பக்தன்' என்று பகவான் ஈண்டு கூறுவதற்கு என்ன பொருள் இருக்க முடியும்?

மேலே கூறப்பட்ட ஞானி பக்தர்கள் அனைவரும், அவர்களைப் போன்ற ஏனையோரும் உலகம் தங்களுக்கு இழைத்த இன்னல்களை இன்னல்களாக ஏற்றுக் கொள்ளவேயில்லை. தனது உடல் வாழ்க்கையில் எத்தகைய கேடு ஏற்படினும்அது குறித்து பக்தன் கொஞ்சமும் மனக்கிலேசம் அடைவது கிடையாது. சாதாரண மக்களாகிய அதாவது அஞ்ஞானத்தில் உழலும் நம் நோக்கில், அவை இன்னல்களாகத் தோன்றுகின்றன. ஆனால் பக்தர்கள் அவற்றை இறைவன் தங்களுக்கு அளித்த வரப்ரஸாதமாகக் கருதுகின்றனர். எது வரினும், 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்ற உயர்ந்த நிலை அவர்களது நிலையாகும்.

எத்தகைய பயிற்சியால் இந்த மனநிலை ஒருவனுக்கு வந்து வாய்க்கும்? 'ஹர்ஷ' என்றால் களிப்பு என்று பொருள். 'அமர்ஷம்' என்பது சினத்தைக் குறிக்கிறது. இன்பந்தரும் பொருள்களைப் பெற்று எவன் களிப்புறுகின்றானோ அவன் அவை கிடைக்காத பொழுது துன்பத்திற்கும் இலக்காகின்றான். பக்தன் இன்பம் தரும் பொருள்களைப் பெற்றுக் களிப்புறுவதில்லை. எனவே அவற்றை இழக்கும் பொழுதும் துக்கமும் அடைவதில்லை. உறுதியான மனம் இன்ப துன்பம் இரண்டையும் சமமாகக் கருதுகிறது.

கோபம் வருவது நம்மிடம் உள்ள மனவலிவின்மையைக் குறிக்கிறது. மனஉள்வலி உடையவன் கோபத்தை வென்றவன் ஆவான். பக்தன் வலிமையே வடிவெடுத்தவன், ஆதலால் எதனாலும் அவன் சினமடைய மாட்டான்.

பயம் மரணத்திற்கு நிகர். 'அஞ்சி அஞ்சிச் சாவார் இவர் அஞ்சாத பொருளில்லை' என்னும் கவியின் வாக்கியத்துக்கு ஏற்ப மனத்தில் வலிமை உடையோர் எதற்கும் அஞ்ச மாட்டார்கள். அச்சம் அவர்களைக் கண்டு அஞ்சி விலகும்.

அச்சம் மனக் கலக்கத்தை உண்டு பண்ணுகிறது. கலங்கிய நீரில் பிம்பம் சரிவரத் தெரியாதது போன்று கலங்கிய மனத்தில் உண்மை சரிவரப் புலப்படாது. பக்தன் மனக் கலக்கம் அடைய மாட்டான். அஞ்சா நெஞ்சம் படைத்தவனே ஆன்ம சாதனைக் குரியவனாகிறான். எதையும் தாங்கும் இதயம் படைத்தவனே இறைவனது அருளைப் பெறத்தகுதியுடையவனாவான்.

(தொடரும்)

# தெள்ளியார் வணங்கும் மலை

எம்பெருமான் பள்ளி கொண்டு திருப்பாற் கடலில் எழுந்தருளியிருக்கிருன். பழங்காலத்தில் கண்ண பிராஞகத் திருவவதரித்துப் பூதனை என்னும் பேய் மகளிடம் பால் குடிப் பவனைப் போல அவள் உயிரையே குடித்தவன்.

பள்ளி ஆவது பாற்கடல்
அரங்கம்; இரங்க வன் பேய்முலை
பிள்ளையாய் உயிர் உண்ட எந்தை
பிரான்.

அவன் திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கிருன். அங்கே அவன் அடியவர்களுக்கு அருளை வழங்கி நித்தியவாசம் செய்கிருன். தன் அருளை அடியார்களுக்கு வழங்குவதனல் அவன் பூரித்துப் போகிருன்; அவன் வளம் பெற்று உவகை பொங்கப் பெருகி நிற்கிருன்.

பெருகும் இடம்.

தெளிந்த அறிவுடைய மெய்ஞ்ஞானிகள் அவனிடம் வந்து வணங்குகிருர்கள். தம் பொறிகளுக்கு அகப் படாத பரம்பொருள் கருணையினுல் இப்படி ஒரு வடிவெடுத்து வந்து நிற்கின்றதே என்று மகிழ்ந்து ஒவ்வொரு நாளும் வந்து வழிபடுகிருர்கள். அவனே வெண்மையான திருமேனியுடன் பலராமஞக இருப்பவன். அவனே கரிய திருமேனியுடன் கண்ணஞகத் தோற்றம் அளிப்பவன். மாணிக்கம் போன்ற வண்ணமுடைய சிவ பிராஞகவும் காட்சி தருபவன் அவனே. வெவ்வேறு வகையில் காட்சி அளித்தாலும் அந்த வடிவங்கள் யாவும் அவன் மேற்கொள்ளும் கோலங்களே என்ற உண்மையை அவர்கள் அறிவார்கள். 'வெள்ளியான், கரியான், மணிநிற வண்ணன்' என்று அவனை எண்ணி நாள்தோறும் அவர்கள் வணங்குகிருர்கள்.

வெள்ளியான், கரியான், மணிநிற
வண்ணன்



என்று எண்ணி நாள்தோறும்
தெள்ளியார் வணங்கும் மலைத் திரு
வேங்கடம்.

திருவேங்கடத்தில் நெடியோனுக நின்ற அவனை வணங்கும் போதெல்லாம், வெவ்வேறு கொள்கையும் உபாசனை முறையும் உடையவர்கள் வணங்கி வழிபடுபவன் அந்த ஒருவனே என்பதை அடியார்கள் எண்ணி மகிழ்கிருர்கள். 'தமர் உகந்தது எவ்வுருவம் அவ்வுருவம்' கொண்டு அவர்களுக்கெல்லாம் அருள் பாலிக்கும் பெருங்கருணையை எண்ணி எண்ணி உவகை அடைகிருர்கள். ''அத்தகைய பெருமான் எழுந்தருளிய மலையாகிய திருவேங்கடத்தை அடைந்து, நெஞ்சமே, நீயும் இறைஞ்சி நற்பேறு பெறுவாயாக!'' என்கிருர் ஆழ்வார்.

பள்ளி ஆவது பாற்கடல் அரங்கம்;
இரங்கவன் பேய்முலை
பிள்ளையாய் உயிர்உண்ட எந்தை
பிரானவன் பெருகும்இடம்;
வெள்ளியான் கரியான் மணிநிற
வண்ணன் என்றுஎண்ணி நாள்
தோறும்
தெள்ளியார் வணங் கும்ம லைத்திரு
வேங்கடம்அடைநெஞ்சமே !

திருமாலைக் காணவேணும் என்னும் ஆர்வம் கொண்டுள்ள என் நெஞ்சே, அவனுக்குத் துயிலும் பள்ளியாக அமைவது திருப்பாற் கடலாகிய இடம்; வலிய பேயாகிய பூதனையின் நகிலில் உள்ள பாலைச் சிறு குழந்தையாக உருவம் கொண்டு உண்டு, அதனல் அவள் உயிரையே உண்ட எமதப்பன், பரமோபகாரி ஆகிய அவன் தன் அருளைக் கொழித்துக் கொண்டு வர்த்திக்கும் திவ்ய தேசம், 'வெண்ணிறமுடையவன், கருமேனி கொண்டவன், மாணிக்க நிறம் உடையவன்' என்று தியானித்து, தினந்தோறும் தெளிந்த அறிவுடையவர்கள் வந்து வழிபடும் திருமலையாகிய திருவேங்கடம்; அதை அடைந்து நீ வழிபடுவாயாக.

---

திரு. கி. வா. ஜகந்நாதன்,
சென்னை.

---

(பள்ளி-படுக்கும் இடம். அரங்கம்-இடம். இரங்க-வருந்தும்படி. பேய்-பூதனை, பிரான்-உபகாரி, பிரானவன்; அவன், பகுதிப் பொருள் விகுதி, பெருகும்-வளரும். அடியவர்களுக்கு அருள்புரிவதே அவனுக்கு உகப்பாதலின், அதனுல் அவன் வளர்ச்சி பெறுகிறுனும். கொடுக்கக் கொடுக்கக் குறைவடையும் பொருளைப்போல இன்றி அவன் அருள் வழங்க வழங்கப் பெருகுகிறது. எடுக்க எடுக்க நீர் குறையாமல் நிரம்பி வரும் ஊற்றுக் கண்ணையுடைய பொய்கையைப் போல அவன் இருக்கிருன். தெள்ளியார்-தெளிந்தவர்; மெய்ப்பொருள் இன்னதென்று ஆராய்ந்து தெள்ளத் தெளிந்தவர், மலையாகிய திருவேங்கடம். அடை-சென்று வழிபடு; புகலாகப் புகுவாயாக என்றும் பொருள் கொள்ளலாம். நெஞ்சமே: ஏகாரம்; விளி.)

பெரிய திருமொழியில் முதல் பத்தில் 8-ஆம் பதிகத்தில் வரும் இரண்டாவது பாசுரம் இது.

★

# ஸ்ரீ குலசேகர இராமாயணம்

இந்தியாவின் இரண்டு கண்களாக விளங்கும் இதிகாசங்கள் இராமாயணமும், மகாபாரதமும் ஆகும். இவற்றை ஆழ்வார்கள் தாங்கள் அருளிச் செய்த நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் நம் போன்றவர்களுக்கும் விளங்கும்படி அவ்வவ்விடங்களில் பாக்களால் பாடியுள்ளனர்.

''காகுத்தனல்லால் ஒரு தெய்வம்
யானிலேன்''
(நான்முகன் திருவந்தாதி 53)

என்று அருளிய திருமழிசை ஆழ்வாரின் திருவாக்கின் படியும்,

'' கற்பார் இராமபிரானையல்லால்
மற்றுங்கற்பரோ...''
(திருவாய்மொழி 7-5-1)

என்று அருளிய நம்மாழ்வாரின் திருவாக்கின் படியும் பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான குலசேகராழ்வார் இராமாவதாரத்தில் மிகவும்ஈடுபட்டு எப்போதும் இராமாயணத்தையே பாராயணம் செய்து, தனது ப்ரபந்தமான பெருமாள் திருமொழியில்–எட்டாவது திருமொழியில் சக்கரவர்த்தித் திருமகனை பெற்றெடுத்த கௌசல்யை, தொட்டிலிலிட்டுத் தாலாட்டுக் கூறின முகத்தை தான் அனுபவித்துப் பாடி, ஒன்பதாம் திருமொழியில் தயரதன் இராமபிரான் காட்டிற்குச் செல்லும் பிரிவாற்றாமையை நினைத்துப் புலம்பிய புலம்பலைப்பாடி, இறுதியில் ஒரு பதிகத்தால் இராமசரிதத்தைப் பின்புள்ளாரும் எளிதாக உணர்ந்து உய்யும் பொருட்டுச் சுருக்கமாகத் தில்லை நகரில் வீற்றிருக்கும் திருச்சித்திரக் கூடத்துச் செல்வனிடம் பாடி நம் போன்றவர்களைப் பரவசப்படுத்துகிறார். இவ்வாறு தமிழ் மொழியில் மிகவும் சுருக்கமாகவும், ஸ்ரீ இராமாயணம் முழுவதும் உணர்த்தவல்லதாயுமுள்ள இப்பிரபந்தத்தை ஸ்ரீ வால்மீகி பகவான் பேசி அனுபவித்தாற் போல் இவ்வாழ்வாரும் பேசி அனுபவிப்பதை ஈண்டு காணலாம்:

''அங்கணெடுமதிள் புடைசூழ்......
.......கண்குளிரக் காணுநாளே''

என்கிற பாட்டால் இராமபிரானின் பிறப்பின் பெருமையை அருளுகிறார். அதாவது, அழகிய நிலப்பரப்பை யுடையதும், உயர்ந்த மதிள்களினால் நாற்புறமும் சூழப்பட்டதும், பகைவர்களால் வெல்லமுடியாததால் 'அயோத்யா' என்று ப்ரஸித்தமான அழகிய நகரிலே எல்லா லோகங்களையும் தனது ஒளியின் அம்சத்தாலே விளங்கச் செய்கிற சூர்யவம்சத்திற்கு ஒப்பற்ற விளக்குபோல வந்து அவதரித்தவனான மகாவீரனும் சிவந்த கண்களையுடைய காளமேகம் போன்ற வடிவையுடையவனான இராமன் அவதரித்தான். இப்பாட்டில், 'அணிநகரத்துலகனைத்தும் விளக்குஞ்சோதி' என்றும், 'வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்கு' என்றும், 'விண்முழுதுமுயக் கொண்டவீரன்' என்றும், 'செங்கணெடுங்கருமுகில்' என்றும் பலவாறு இராமபிரானைப் போற்றுகிறார்.

''வந்தெதிர்ந்த தாடகை.........
.........அம்மான் தானே''

என்கிற பாட்டால், தாடகையென்னும் அரக்கியின் மார்பைப் பிளந்து இரத்தம் சொரியும்படி ஒப்பற்றதோர் அம்பை எய்தி, எல்லா மந்திரங்களையும் தம்மிடத்தே கொண்ட வேதங்களின் வழியே விச்வாமித்ர முனிவர் செய்த யாகத்தைப் பாதுகாத்து, அந்த யாகத்திற்குத் துன்பம் விளைத்த ஸுபாஹு முதலான பல அரக்கர்களைக் கொன்று மாரீசனை வாயவ்யாஸ்திரத்தினால் கடலிலே தள்ளி யாகத்தை நிறைவேற்றிய மிடுக்கையுடையவன் இராமன் என்று அருளுகிறார்.

பின்னர், சிவந்த ரேகைகள் படர்ந்த அழகிய கருமைநிறம் கொண்டு, நீண்ட கண்களையுடைய சீதையை திருமணம் செய்து கொள்ளும் பொருட்டு, கோபத்தையுடைய ரிஷபத்தை வாகனமாகக் கொண்ட சிவனின் வில்லை முறித்து, கோடாலியை ஆயுதமாகக் கொண்ட பரசுராமனுடைய பயங்கரமான கட்டமைந்த வில்லை வளைத்து அவனை வென்றான் இராமன். அப்படிப்பட்ட பயங்கரமான வில்லை ஏந்திய பெரிய கையையுடைய திருச்சித்திரக்கூடத்துள் இராமபிரானை வணங்குகிற அடியார்களுடைய இரண்டு திருவடிகளையே வணங்குவதாக ஆழ்வார் கூறுகிறார்,

''செவ்வரி நற்கருநெடுங்கண்......
..........இறைஞ்சினேனே''

என்கிற பாட்டால். இப்பாட்டில் 'இறைஞ்சுவாரிணையடியே யிறைஞ்சினேனே'' என்கிற தொடரால், 'இராமனுக்கு அடியவனான பரதனுக்கு அடிமைப் பூண்டொழுகின சத்ருக்னன் போலப் பாகவத தாஸனாகவேண்டுமென அவாவுகின்றார் ஆழ்வார்' என்று அழகாக அனுபவிக்கிறார் ஸ்ரீகாஞ்சி ஸ்வாமி.

''கொத்தலர்பூஞ்சுரிகுழல்........
...இமையவர் நேரொவ் வார்தாமே''

என்கிற பாட்டால், கொத்துக் கொத்தாக மலர்ந்த புஷ்பங்களைச் சூடிய நுனிசுருண்ட கூந்தலையுடைய கைகேயின் சொற்படி தொன்று தொட்டு வழி வழியாய் வருகிற அரசைத்துறந்து, மகாபக்தனான குகப்பெருமானின் உதவியால் கங்கையின் துறையைக் கடந்து காட்டிற்குப் போய்ச் சேர்ந்து, அங்குவந்த பரதாழ்வானுக்கு தனது மரவடியையும் ராஜ்யத்தையும் கொடுத்துச் சித்ரக்கூடத்தில் எழுந்தருளியிருப்பதை அருளுகிறார். அவ்வாறு ஸ்ரீ இராமாவதாரத்தில் சித்ரகூடபர்வத்தில் எழுந்தருளியிருந்த இருப்பைப் பிற்பட்டோர் கேட்டு அநுபவிக்கப் பெறுவதேயன்றித் தாம் கண்டு அனுபவிக்கப் பெறாமல் கண்விடாய்த்து நிற்கிற குறைதீர எக்காலத்திலுமுள்ளோர் அனுபவிக்கைக்காக அங்ஙனமே தில்லைத் திருச்சித்ரக் கூடத்தில் வீற்றிருக்கின்றான் என்கிற பின்னடிகளின் உட்கருத்தாக பெரியோர் பணிப்பர்.

சித்ரக் கூடப்பருவத்தில் எழுந்தருளியிருக்கும்போது, மலைபோன்ற தோள்வலிமை கொண்ட எதிரிகளை தோற்கிக்கின்ற விராதன் என்னும் அரக்கனைக் கொன்று சிறந்த தமிழ்

மொழிக்கு உரியவரான அகத்திய முனிவர் கொடுத்தவில்லைப்பெற்றுன் இராமன், மேலும் மானின் பார்வையைக் காட்டிலும் அழகிய கண்களையுடையவளான சூர்ப்பணகை என்னும் அரக்கியின் மூக்கையறுத்து, கரதூஷணர்களையும் கொன்று, மாரீசனை மான் அழியும்படி தனது வில்லைவளைத்துஅம்புகளை எய்தினன். இவ்விடத்தில்.

" கலைவணக்கு நோக்கரக்கிமூக்கைநீக்கிக்
கரனேடு தூடணன் தன்னுயிரை
வாங்கி..... "

என்று ஆழ்வார் இராமனே சூர்ப்பணகையைஅங்கபங்கம்செய்ததாகக் கூறுகிறுர். அது எவ்வாறு அமையுமெனில், சூர்ப்பணகையை அங்கபங்கம் செய்தது இளையபெருமானின் செய்கையாயினும் அதனை இராமன் மேல் ஏற்றிச் சொன்னது "ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:" என்கிறபடி இராமபிரானுக்கு இலக்குமணன் வலத்திருக்கை எனப்படுவதால் அங்ஙனம் கையாகிற இலக்குமணன் செயலை இராமன்மேல் ஒற்றுமை நயம்பற்றி ஏற்றிச் சொல்லுதல் தகும்.

மாரீசனை மானைக் கொன்றதனுல், தனது செல்வமாகிய பிராட்டியை பிரியப் பெற்று, வருத்தமடைந்து, ஜடாயுவென்னும் கழுகரசை பரமபதத்திற்குச் செலுத்தி, வானர ராஜனை சுக்ரீவனுடன் நட்பு கொண்டு அவனது விருப்பத்தின் பேரில் அவன் தனயனை வாலியைக் கொன்றுன். பின்னர் இலங்காபுரியை ஆளும் இராவணனுடைய கர்வம் அடங்கும்படி, சிறிய திருவடி என்று பட்டம் பெற்ற அனுமனைக் கொண்டு இலங்கையை எரியச்செய்தான். இவ்விடத்தில் ஆழ்வார் 'சினமடங்க மாருதியில் சுடுவித்தானை' என்று அனுபவிப்பது குறிப்பிடத்தக்கது.

" குரை கடலை......மற்றரசு தானே "
என்கிற பாட்டால், மிக்க ஓசையையுடைய கடலை கொடிய அம்பால் கலக்கச் செய்து, அதில் அணையைக் கட்டி, அந்த அணை வழியாக அக்கரையைச் சேர்ந்து, சத்ருக்களை எரிக்கின்ற நீண்ட வேற்படையுடைய அரக்கர்களையும், இலங்கைக்கு அரசனை இராவணனும் அழியும்படி அவர்களையும் கொன்று அவ்இராவணனுடைய தம்பியான விபீடணனுக்கு இலங்கையைக் கொடுத்து, இலக்குமியின் அவதாரமான சீதாப் பிராட்டியுடன் இனிமையாக எழுந்தருளியிருக்கிறுன் இராமன் என்று பரக்க அனுபவிக்கிறுர் ஆழ்வார். மேலும், ஸாதுக்களைக்காப்பாற்றவும்,துஷ்டர்களை நசிக்கவும் செய்து உலகுய்யச் செய்த இராமபிரானின் திருவடிகளைத் தலைக்கு ஓர் ஆபரணமாகக் கொள்வதே தமக்கு ஒரு அரசாட்சி ஆகும் என்பதை 'அரசமர்ந்தான் அடி சூடும் அரசையல்லால் அரசாக வெண்ணேன் மற்றரசு தானே' என்கிற தொடரால் அனுபவிக்கின்றுர்.

அவ்வாறு சீதாப் பிராட்டியுடன் கூடிய இராமன் அழகிய உயர்ந்த பொன்னையும் இரத்தினங்களையும் கொண்டு அமைக்கப் பெற்ற மச்சு வீடுகளையுடைய 'அயோத்யா' நகரத்திற்கு மீண்டும் வந்து, அரசாட்சியைப் பெற்று, தன்னுல் முன்பு கொல்லப்பட்ட இராவணனின்பெரிய பூர்வ சரிதத்தை அகத்திய முனிவரின் வாயால் சொல்லக் கேட்டான்.

இவ்வுலகு உய்யப்பெற்ற தன் புதல்வர்களான குசலவர்களின் பவள வாயால் தனது சரிதமான ஸ்ரீ ராமாயணத்தைக் கேட்டு, மிக்க தவம் செய்த சம்புகனின் தலையை அறுத்து சிறந்த வேதமோதும் அந்தணன் குமாரனின் உயிரை மீட்டுக் கொடுத்தான் இராமன். குசலவர்களின் இராமாயண ப்ரவசனத்தால் உலகம் நன்னெறி உய்த்ததைத் தோன்ற 'உலகுய்ய திருவயிறு வாய்த்த மக்கள்' என்று ஆழ்வார் அனுபவிக்கிறுர்.

**திரு. மா. வரதராஜன்,**
*திருப்பதி.*

அகத்தியர் கொடுத்த விலையுள்ள இரத்தின மாலையை அணிந்து கொண்டு இலவணுசுரனை தன் தம்பி சத்ருக்னனைக் கொண்டு வீர சுவர்க்கம் எய்வித்தவனும், துர்வாச முனிவரின் சாபத்தால் மிக்க வீரரான இலக்குமணனைத் துறந்தவனும், தில்லைநகர் திருச்சித்திரக் கூடத்தில் தன்னை இராமாவதாரத்தில் காணப் பெருத குறை தீர நித்யவாஸம் பண்ணுபவனை இராமனை,

# புரோஹிதர் சங்கம், திருமலை
## கட்டண விவரங்கள்
(செய்து வைக்க)

| | | ரூ. காசு |
|---|---|---|
| 1. | பிராமணர்கள் மற்றும் வைசியர்கள் திருமணம் | 36–00 |
| 2. | பிராமணர்கள் மற்றும் வைசியர்கள் உபநயனம் | 32–00 |
| 3. | மற்றைய திருமணங்கள் (ஹோமம் இன்றி) | 22–00 |
| 4. | மற்றைய திருமணங்கள் (ஹோமம் மற்றும் கன்னியாதானம் உள்ளிட்டது) | 34–00 |
| 5. | சத்ய நாராயண விரதம் | 18–00 |
| 6. | கேஸ கண்டனம் மற்றும் மற்றைய பூசைகள் | 8–00 |
| 7. | பிண்ட பிரதானம் | 5–00 |
| 8. | ஹிரண்ய கோதானம் | 6–00 |
| 9. | அன்னதானம் | 3–00 |
| 10. | சாளிக்ராம தானம் | 1–25 |
| 11. | சங்கல்பம் | 1–00 |
| 12. | ஷோடஸ மகாதானம் | 16–00 |
| 13. | தாஸ தானம் | 10–00 |
| 14. | நவக்ரஹ தானம் | 9–00 |
| 15. | சங்கல்பம், பூசை | 1–00 |

" மறவாத வுள்ளந்தன்னையுடையோம்
மற்றுறு துயரம் அடையோமன்றே"

என்று பாரித்துப் பேசுகிறார் ஆழ்வார். அதாவது, நித்யவாசம் பண்ணும் இராமபிரானை மறவாமல் எப்போதும் தியானித்திருக்கும் மனதைக் கொண்டால், இனிவரும் துன்பத்தை—எம்பெருமானை அனுபவிக்கப் பெற்றிலோமே—அடைய மாட்டோம் என்பதே.

இலக்குமணனைப் பிரிந்ததனால் மனம் வருத்தமடைந்த இராமபிரான் ராஜ்யத்தைவிட்டு தன்னடிச் சோதிக்கு புறப்படும்போது அயோத்தியா நகரின் உயிர்களெல்லாம் இராமபிரானுடன் எங்குச் சென்றாலும் வருவதாகக் கூற, அவர்களின் பக்தியின் மேலிட்டால் இராமபிரானும் இசைந்து, அவர்களும் பின் தொடர, எல்லா சித்து, அசித்து வஸ்துக்களையும் பரமபதம் போகச் செய்து, வலிமையான பாம்புகளுக்குப் பகையான கருடன் மேலே ஏறி அரக்கர்களை வென்று, அழகிய நீண்ட நான்கு கால்களுடன் விளங்க, பரமபதத்தில் உள்ள யாவரும் எதிர் கொண்டு உபசரிக்கும்படி அங்குச் சென்று தன் மேன்மையெல்லாம் தோன்றும்படி திவ்ய சிங்காசனத்தில் வீற்றிருந்தான்.

இவ்வாறு இராமாவதாரம் செய்த எம்பெருமான் தன்னைக் காணப் பெறாத பிற்காலத்தார் குறை தீருவதற்காக இவ்வுலகத்தார் காணும்படி தில்லைத் திருச்சித்திரக் கூடத்தில் மிக்க தோள் வலிமை கொண்ட அனுமனுடன் திவ்யமங்கள திருமேனி கொண்டு திவ்ய வாஸம் செய்தருளுகிறான் என்பதை,

'தில்லை நகரத் திருச்சித்திரக் கூடத்
தன்னுள்
திறள் விளங்கு மாருதி யோடமர்ந்
தான் தன்னை'

என்றும்,

'எல்லையில் சீர்த்தயரதன்தன்னுலகம்
புக்க திரு'

என்கிறபடி அழிவில்லாத புகழையுடைய தசரத சக்ரவர்த்தியின் குமாரனை இராமபிரான் பிறந்தது முதல் பரமபதம் புக்கது இறுதியாக ஸ்ரீ ராமாயணம் முழுவதையும் சுருக்கமாக அமைத்துப் பாடிய,

'கொல்லியலும் படைத்தானைக்
கொற்ற வொள்வாள்
கோழியர் கோன் குடைக்குலசேகரன்'

என்று போற்றத்தக்க குலசேகரப் பெருமாளின் சிறந்த இயற்றமிழிலக்கணத்துக்கு இசைந்த இனிய தமிழ் மாலை இப்பத்து பாசுரங்களையும் கற்றுவல்லவர்கள், பரமபதத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடிகளில் சேரப் பெறுவார்கள் என்று தலைக்கட்டுகிறார் ஆழ்வார். ஆக இப்படிச் சக்ரவர்த்தித் திருமகனை பெருமாளிடமே தம் வாழ்க்கையிலும், பிரபந்தத்திலும் மிகுந்த ஈடுபாட்டைக் காட்டிய குலசேகரப் பெருமாளையும், இராம சரிதத்தையும் சிந்தையாலும் சொல்லாலும் போற்றுதல் நம்முடைய வினைக்கு மருந்தாகும்.






# ஸம்பத் கௌரி விரதம்

திருவிளையாடற் புராணத்தில் கௌரி என்ற சிவபக்தைக்கு சிவபெருமான் அருளிய வரலாறு கூறப்படுகிறது. கௌரி என்ற பெண் சிவனடியார் குடும்பத்தில் பிறந்தவள். ஆனால் அவள் ஒரு வைணவ பிரம்மசாரியை மணக்க நேரிடுகிறது. எனவே குடிபுகுந்த புருஷன் வீட்டாரால் இவளது சிவ வழிபாட்டிற்கு எண்ணற்ற இடையூறுகள் உண்டாகின்றன. சிவனடியார்க்கு அமுது செய்வித்தலில் கௌரி மிகவும் விருப்பம் மிக்கவள். மகேசனுக்கு இது மிகவும் இன்பமளிக்குமாதலின் இது மஹேச்வர பூஜை எனப்படும். இதனையும் கௌரி சரி வரச் செய்ய முடியாமல் தவித்தாள். இவளது பக்தியை சோதிக்க எண்ணிய இறைவன் இவள் மட்டும் வீட்டில் தனியாக இருந்த நேரத்தில் சிவனடியாராக வந்து உணவுவேண்டினார். கௌரியும்வாழையிலை விரித்து உணவு பரிமாறி அடிகளை உண்ண அழைத்தாள். சிவனடியார் இவ்விதம் உணவருந்திக் கொண்டிருக்கையில் கௌரியின் கணவன் தன் தாய் தந்தையருடன் வருவதை கௌரி கண்டாள். அவர்கள் சிவனடியாரைக் கண்டு தன் கற்பின் மேலேயே ஐயுறுவார்களோ என்று மனம்கலங்கிய கௌரி பரமனை வேண்டினாள். கிழவரான சிவனடியார் உடனே கட்டிளம் குமரனாக மாறினார். கௌரி மேலும் பயந்தாள். உற்றார் அனைவரும் வீட்டினுள் நுழைந்தவுடன் குமரனாயிருந்த சிவன் அடியார் சிறு குழந்தையாக மாறினார். உணவு உண்ட கலம், உணவுகள் யாவுமே மறைந்தன. கௌரியின் புக்ககத்தினர் குழந்தையைக் கண்டு ஐயுற்று கௌரியை ஏசினர். உண்மையை உணர்த்த வேண்டி சிவபெருமானும் ரிஷபாரூடராக காட்சியளித்து கௌரிக்கு மலையரையன் மகளான கௌரி தேவியின் சாருபத்தை அளித்துத்தன் இடப்பாகத்தில் ஏற்றுக் கொண்டார். இதே வரலாறு காசி புராணம் போன்றவற்றில் சில மாறுதல்களுடன் காணப்படுகின்றது. சிவபெருமான் வேதங்களின் தத்துவத்தை தேவிக்கு உபதேசிக்கும் போது சற்று கவனக்குறைவாக தேவி நடந்து கொண்டதால் ஈசனின் சாபத்திற்கு ஆளாகி கௌரி என்ற திருநாமத்துடன் மனித வடிவெடுத்து மீண்டும் தவம் புரிந்து இறைவனை அடைந்ததாக வடமொழிப் புராணங்கள் கூறுகின்றன.

கௌரீ என்றாலே தங்கநிறமுள்ளவள் என்று பெயர். பக்தர்கட்கு எல்லையற்ற செல்வத்தையும் தங்கமாகிய ஸ்வர்ணத்தையும் அளிப்பவளாதலின் ஸம்பத் கௌரீ என்றும் ஸ்வர்ண கௌரீ என்றும் அழைக்கப்படுகிறாள். ஆடிமாதம் சுக்லபக்ஷ திருதியை ஸம்பத் கௌரீ அல்லது ஸ்வர்ண கௌரீ விரதநாளாகும். இந்த விரதநாளைக் கன்னிப் பெண்களும், மணமான சுமங்கலிகளும் செய்யலாம். முதல் நாள் இரவு உணவு கூடாது. கணவருடன் உறங்காது தனித்து வெறும் தரையில் படுத்து உறங்கி விரதநாளில் விடியற் காலை ஆற்றில் நீராடி 5 வயது முதிர்ந்த சுமங்கலிகட்கு வெற்றிலை, பாக்கு, முகம் பார்க்கும் கண்ணாடி, சீப்பு, மஞ்சள் கிழங்கு, ரவிக்கைத் துண்டு, முழுரூபாய் நாணயம் ஆகியவை தானம் வழங்கவேண்டும். பிறகு வீட்டிற்கு வந்து குத்துவிளக்கு ஐந்து முகம் ஏற்றி அதை முழு அரிசி அல்லது நெல் நிரம்பிய உலோகத் தட்டில் வைத்து தீப ஜ்வாலையில் கௌரீ அம்மனை ஆவாஹனம் செய்து கௌரீ அஷ்டோத்திரம், லலிதா ஸஹஸ்ர நாமம், லலிதாத்ரிசதி, தேவி கட்கமாலா போன்றவைகளில் ஏதேனும் ஒன்றால் சிவப்பு மலர்களால் அர்ச்சித்து வரவேண்டும். பிறகு தூப தீபம் காட்டி பாயஸம், வடை, அன்னம் போன்றவைகளை நிவேதனம் செய்ய வேண்டும். மாவிளக்கும் இந்த சமயத்தில் போடலாம். பிறகு கற்பூர ஹாரத்தி செய்து தீப ஜ்வாலையில் அம்பாளை யதாஸ்தானம் செய்ய வேண்டும்.

**திரு. பி. சுந்தரராமன்,** M.A., B.Ed.,
தஞ்சாவூர்.

பூஜை முடிந்ததும் புஷ்பவதியாகாத 5 பெண்குழந்தைகட்கு வயிறு நிரம்ப அன்னமிட்டு, அவர்கள் காலில் நலங்கிட்டு, பூச்சூட்டி, தாம்பூலம், தக்ஷிணை, வஸ்திரம் ஆகியவைகளை தானம் செய்து இன்முகத்துடன் வாயில் வரையில் கொண்டு சென்று வழியனுப்ப வேண்டும். வீட்டில்

உள்ள அனைவருமே இந்த போஜனம் முடிந்த பிறகுதான் உண்ண வேண்டும். விரத மிருக்கும் ஸ்திரீ, இந்த 5 குழந்தைகள் உண்ட மிச்சத்தை அருவருப்பு சற்றும் மனத்தில் எழாமல் மூன்று கவளம் அருந்தி விட்டு அன்று பகல் ஒருவேளை மட்டும் உண்ண வேண்டும். இவ்விதம் விரத மிருப்பதால் திருமணம், புத்திரப் பேறு, தீராத நோய்கள் நீங்குதல், செல்வச் சேர்க்கை ஆகிய எதனை மனதில் எண்ணி விரத மிருந்தாலும் அது ஒரு மண்டலத்தில் நிறைவேறியே தீரும்.

இதேபோல் ஆவணி மீ சுக்லபக்ஷ சஷ்டி 'மங்கள கௌரி' விரத தினமாகவும், புரட்டாசி கிருஷ்ணபக்ஷ ஸப்தமி, சுக்லபக்ஷ பஞ்சமி இவ்விரு நாட்களும் கஜகௌரி விரதமாகவும், புரட்டாசி மஹாளய அமாவாசை விருத்த கௌரி தினமாகவும், புரட்டாசி சுக்லபக்ஷ தசமி அல்லது விஜய தசமி தசரத லலிதா கௌரி விரதமாகவும், புரட்டாசி சுக்லபக்ஷ ஏகாதசி துளஸி கௌரி விரதமாகவும், ஐப்பசி அமாவாசை கேதார கௌரி விரதமாகவும், கார்த்திகை சுக்லபக்ஷ சதுர்த்தி பதரீ கௌரி விரதமாகவும், பங்குனி சுக்லபக்ஷ திருதியை ஸௌபாக்கியம் தரும் ஸௌபாக்ய கௌரி விரதமாகவும், சித்திரை சுக்லபக்ஷ பஞ்சமி லாவண்ய கௌரி விரதமாகவும், ஆனி சுக்லபக்ஷ பிரதமை ரம்பா கௌரி விரதமாகவும், ஆவணி சுக்ல பக்ஷ பஞ்சமி சமீப கௌரி விரதமாகவும் அனுஷ்டிக்கப்படுதல் வேண்டும்.

ஸம்பத் கௌரி, செல்வத்தை அளிப்பாள். மங்கள கௌரி மாங்கல்யத்தையும், விவாஹத்தையும் அருள்வாள், கஜகௌரி வலிமையும், வ்ருத்தி கௌரீ புத்ர ஸந்தானத்தையும், துளஸீ கௌரி விஷ்ணு அருளையும், கேதாரகௌரி பரமேச்வரனின் அருளையும், லாவண்ய கௌரி அழகையும், ஸௌபாக்ய கௌரி எல்லா வகை ஸௌபாக்யங்களையும் அருள்வார்கள். புன்னாக கௌரி ஸர்ப்ப தோஷங்களையும், சமீப கௌரி மோக்ஷ ஸாம்ராஜ்யமாகிய தன் ஸாமீப்யத்தை அருள்பவள். அம்பாளின் திருக்கரங்களால் காட்டப்படும் முத்திரைகளில் பயம், ஆபத்து இவைகளில் இருந்து காப்பாற்றும் முத்திரை அபயம என்றும் சகல அபீஷ்டங்களையும் கொடுக்கும் முத்திரை வரதம் என்றும் கூறப்படும். இவ்விதம் வரத முத்திரையைக் காட்டி அம்பாள் கையை எப்போதும் மேல்நோக்கி வைத்துக் கொண்டிருக்கும் காரணம், பக்தர்கள் கோரிய வரங்களை அளிப்பதற்காகவே ஆகும். எனவே வரதா கௌரி பக்தர்களின் குறைகளைத் தீர்த்து கேட்டவர்க்குக் கேட்ட வரங்களை அருளுவாள். ரம்பா கௌரி ரம்பையினால் துதிக்கப்பெற்று வரங்களை அடைந்தவள். ''ரம்பாதி வந்திதா'' என்று லலிதா ஸஹஸ்ர நாமமும் கூறுவது கருதத்தக்கது.

ஸ்ரீஸம்பத் கௌரியின் மூலமந்திர திற்குரிய ரிஷி ஆனந்த பைரவர். அனுஷ்டுப் சந்தஸ் .. ஸம்பத்கௌரி தேவதை. ஹ்ராம் பீஜம், ஹ்ரீம் சக்தி, ஹ்ரூம் கீலகம் ஆகும்.

மூலமந்த்ரம் பின்வருமாறு :

***"ஓம் ஸ்ரீம் க்லீம் ஐம், ஹ்ரீம் நமோ பகவதி, ஸர்வார்த்த ஸாதகி ஸர்வலோக வசங்கரீ தேவிஸௌபாக்ய ஜனனி ஸ்ரீம் ஹ்ரீம் ஓம் ஸம்பத் கௌரீ தேவி மம தேஹி குருகுரு ஸ்வாஹா"***

மேற்கண்ட மூலமந்த்ரத்தை வில்வ தளங்களால் முக்கோண ஹோம குண்டத்தில் ஹோமம் செய்தால் எல்லையற்ற செல்வம் உண்டாகும். மஞ்சள்பட்டால் ஹோமம் செய்தால் ஸ்வர்ணம் என்னும் தங்கம் சேரும். நகை வியாபாரம் பெருகப் ரோஜா மலரால் ஹோமம் செய்தால் மோகனம் ஸித்தியாகும். வெண் தாமரையால் ஹோமம் செய்தால் சரஸ்வதி கடாக்ஷம் ஏற்படும். இலுப்பை நெய்யால் இலுப்பை ஸமித்துக் கொண்டு ஹோமம் செய்தால் மூலிகைரஸாயனம் ஸித்திக்கும். சிவந்த செவ்வலரி அல்லது முருக்கம் பூக்களால் ஹோமம் செய்ய ஸர்வ ஜன வசியமேற்படும். வேப்ப நெய்யால் வேம்பு விறகு கொண்டு ஹோமம் செய்ய சத்ரு நாச மேற்படும். மது என்னும் தேன் கலந்த எள்ளால் ஹோமம் செய்ய பித்ரு தோஷம் நீங்கும். சந்தனக் கட்டையால் ஹோமம் செய்ய வியாபார அபிவிருத்தி ஏற்படும்.

ஸ்ரீ அம்பாளுக்கும் **வாஞ்சிதார்த்த ப்ரதாயினி** என்று ஒரு திருநாமம் உண்டு. பக்தர்கட்கு கோரிய பொருள்களைக் கொடுக்கும் சுபாவமுள்ளவள் என்று இதன் பொருள். எனவே ஸம்பத்கௌரி அருளால் அன்பர்கள் கோரிய பொருள்கள் எதுவாயினும் அம்பாளருளால் பெற்றுப் பன்னலமும் அடைவார்களாக.

★

அனுப்பியவர் : திருமதி. பி. எஸ். மஞ்சுளா ரங்கராஜன் - திருப்பதி.







# சங்கரஜெயந்தி

உலகத்திலே எல்லாவிதமான பிராணிகளும் இருக்கின்றன. அவைகளுக்குள்ளே மனிதனாகப் பிறந்தவன் மிக உயர்ந்தவன். 'அரிதரிது மானிடராய்ப்பிறத்தல் அரிது'. ஆகையினாலே அரிதான மானிடப் பிறவி எடுத்த நாம் எல்லோரும் மிகவும் புண்ணியவான்கள். இந்த மனிதப் பிறவியிலே, நாம் பெற வேண்டியது முக்கியமாக நான்கு பேர்களுடைய அருளாசி. மாதா, பிதா, குரு, தெய்வம் என்ற நான்கு பேர்கள். நம்முடைய தாய் தந்தையருடைய ஆசியைப் பரிபூரணமாகப் பெற வேண்டும். குருவினுடைய அருளைப் பெற வேண்டும். தெய்வத்தினுடைய அருளைப் பெற வேண்டும். இந்த நாலு பேர்களுக்குள்ளே தாய் தந்தையர் நம்மிடையே இருக்கிறார்கள்; அவர்கள் நமக்கு அருளாசி வழங்கிக் கொண்டே இருக்கிறார்கள்.

'குபுத்ரோ ஜாயேத க்வசிதபி குமாதா ந பவதி'

கெட்ட பிள்ளையாகிலும் இருப்பான்; கெட்ட தாய் ஒரு நாளும் இருக்க மாட்டாள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையினாலே தாய் தந்தையரின் அருள் நமக்குப் பரிபூரணமாக இருக்கிறது. அவர்களுடைய அருள் மூலமாக நாம் நல்ல குருவை அடைய வேண்டும். அந்தக் குருவின் மூலமாகத் தெய்வத்தினுடைய அருளை அடையலாம். தெய்வத்தினுடைய அருளைப் பரிபூரணமாக அடைந்து அருளும் ஆனந்தமும் பெற்று, சந்தோஷத்தோடு வாழ வேண்டும். இதுதான் மனிதருடைய லட்சியமும் குறிக்கோளும். தெய்வத்தினுடைய பரிபூரணமான அருளை அடைய குருவினுடைய பரிபூரண அன்புதான் தேவை.

ஒவ்வொரு மனிதரும் ஓரொரு வழிபாடு பண்ணுகிறார். அந்தத் தெய்வத்துக்கு ஒரு மந்திரம் உண்டு. ஒரு மூர்த்தி உண்டு; உருவம் உண்டு. இதை ஒரு குரு முகமாக உபதேசம் பெற்று ஜபித்து, பூஜித்து, அருள் பெற்று வந்தாரானால் அவர் வாழ்வு நிறைவு பெறும். இந்த மாதிரி உலகத்திலே அநேக மனிதர்கள், அநேக குருமார்கள் மூலமாக—ஆசார்யர்கள் மூலமாக—இந்த அருள் உபதேசத்தைப் பெற்று இருக்கிறார்கள். இவர்களுக்குள்ளே — இத்தனை ஆசார்யர் பெரியார்களுக்குள்ளே— அநாதியான ஒரு குருமூர்த்தி உண்டு. கைலாசத்திலே தெற்கு நோக்கி ஞான உபதேசம் செய்து கொண்டிருக்கிற மூர்த்தி - தக்ஷிணாமூர்த்தி. அந்தத் தக்ஷிணாமூர்த்தியினுடைய அருள் வடிவமாக - சிவனின் வடிவமாக - அவதாரமாக, காலடி க்ஷேத்திரத்திலே சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நம்முடைய பாரத தேசத்திலே, ஆதிசங்கரர் என்ற பெயருடன் அவதாரம் செய்தார் சங்கர பகவான். ஆகையினாலே, மூலகுரு - ஆதிகுரு தக்ஷிணாமூர்த்தி. அந்தத் தக்ஷிணாமூர்த்தியினுடைய அருள் வடிவமாக – சிவனின் வடிவமாக - சங்கரராக – ஆதிசங்கரர் தோன்றினார். அந்தக் குரு பெருமானான ஆதி சங்கரருடைய அவதார உற்சவம் ஒவ்வோர் ஆண்டும் வருகிறது.

'வைகாச சுத்த பஞ்சமி' என்பது வைகாசி மாதத்திலே சுக்ல பஞ்சமி யன்றைக்கு வருகிறது. அவருக்கு உற்சவம் பண்ண நாம் வீடுகளிலே நம்முடைய பிறந்தநாளைக் கொண்டாடுகிற மாதிரி கொண்டாட வேண்டிய அவசியம் இல்லை; கொண்டாடவும் வேண்டாம். அவர் என்ன தத்துவ உபதேசம் பண்ணியிருக்கிறாரோ, உலகம் முழுமைக்கும் எல்லோரும் க்ஷேமமாய் இருப்பதற்கு அமைதியோடு, ஆனந்தத்தோடு சாந்தமான வாழ்க்கை நடத்த எந்தப் பரப்ரஹ்ம தத்துவம்-ஆத்மிக தத்துவம் சொன்னாரோ, வேதாந்த தத்துவம் சொன்னாரோ, அந்தத் தத்துவத்தை ஒவ்வொருவரும் தெரிந்து கொள்வதற்கு முயற்சி பண்ணினாலே அவர்கள் ஜயந்தி பண்ணினதோடு பெரிய பலனாகவும் ஆகும். அதே போல் அவர் ஆயிரக் கணக்கான தோத்திரப் பாடல்கள் பாடியிருக்கிறார். அந்தப் பாடல்களிலே இரண்டு பாடலாவது நாம் கற்றுக் கொள்ள, அந்தத் தெய்வத்தினுடைய அருளை நாம் அடைய முயற்சி பண்ணுவதுதான் அவருக்கு ஜயந்தி விழாக் கொண்டாடும் சிறந்த முறை. அதே போல அவரைப் பற்றி இரண்டு பாடல்களாவது தெரிந்து கொண்டு அந்தப்புகழைப் பாடினால் போதும். ஆகையினாலே ஒவ்வொரு மனிதப் பிறவி எடுத்தவரும், பிறவியில்லாப் பெரும் பேற்றை அடையக் கூடிய ஞான தத்துவ உபதேசம் செய்த அந்த ஆதிசங்கரப் பெருமானுடைய உபதேசத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்.

இன்றைக்குத் தேசிய ஒருமைப்பாடு என்று லௌகிகமாகச் சொல்லிக் கொண்டிருக்கிறோம் உலக வாழ்க்கையிலே. அந்த ஒருமைப்பாட்டுக்கு அடையாளமாகக் கூட அன்றே, ஆதிசங்கர பகவான் தெற்குக் கோடியிலே, காலடியில் தோன்றினாலும் நர்மதை நதியிலே குருவை அடைந்து, காசியிலே

(24-ம் பக்கம் பார்க்க)

---

ஒரு முறை ஸ்ரீ சங்கர ஜயந்தி அன்று ஸ்ரீ காஞ்சி காமகோடி பீட ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் சென்னை வானொலி மூலம் வழங்கிய அருளுரையே இக்கட்டுரை.

---

# திருமலை ஒழுகு

ஒரு விசாலமான பாத்ரத்திலே எட்டு புருஷாகார (மனித வடிவத்தின் அளவுக்குத் தகுதியாம்படி) யோக்யமாம்படி அக்ஷதங்களான சாலி தண்டுலங்களைப் (நெல் அரிசிகளை) பரப்பி, அதிலே ஒன்றோடொன்று கூடாமல், மண்டலாகாரமாக எட்டு ரேகையைக் கீறி, ஏழு திருச்சுற்றுக்கி, எல்லாச் சுற்றுக்களிலும் சுழி சுழியாகக் கீறி, அந்தச் சுழிகளை இரண்டிரண்டாகத் தள்ளிப் போட்ட பின் ஒரு சுழி மிகுந்தால் அது நல்ல சகுன மன்றென்றும், பின்னையொரு திருச்சுற்றிலே சுழிகளை முன்பு போல இரட்டை யிரட்டையாகத் தள்ளிப்போட இரண்டு மிகுந்தால் நல்ல சகுன மென்றும் நிச்சயித்து, சூடிக்கொடுத்த நாய்ச்சியாரை, "திருத்தாய் செம்போத்தே" என்கிற திருமொழியை அநுஸந்தித்துக் கொண்டு ஸ்வயம் வ்யக்தமான திருவேங்கடமுடையான் திருவடி ஸமீபத்திலே கோவிந்தராஜன் சேர்த்தியிலே எழுந்தருளப்பண்ணி, திருவாலத்தி கொண்டருளப் பண்ணி, காலோசிதோப சாரங்களையும் கொண்டருளப்பண்ணிக் கூடல் வளைக்கை. இதொரு ப்ரகாரம், ப்ரகாராந்தரங்களும் (வேறு முறைகளும்) உண்டென்று சொல்லுவார்கள்.

ஹரித்ராசூர்ணஸம்ஸ்கார மாசரேத் ப்ரஹ்மவித் பிது: |
காலே து பரமே புத்ர: ஸ்துதிர் கேயா ச வைஷ்ணவைஃ ||
ஹரித்ராசூர்ணே ரங்காநாம் குருணாம ச மஹாத்மநாம் |
காலேऽந்திமே பரிஷ்காரம் குர்யாந் மந்த்ரபவித்ரிதை: ||
பூர்வம் சூர்ணாபிஷேகஞ்ச ப்ரஹ்மமே தக்கிரியாம் சரேத் |
அவிலம்பேந காலேந துஷ்டேந மநஸா ஸுத: ||

**ஸம்ஹிதாந்தரே :-**

அர்ச்சிராதிகதேர் மார்கசிந்தாத்யாயம் சுபாவஹம் |
படேயு ரநகம் விப்ரா ச்சாந்யா ப்ரஹ்மபரா: ஸ்துதி: ||
மாநுஷீம் சருஷிப்ரோக்தாம் ஸ்துதிம் ச மஹதுத்ஸவே |
உலூகலே து முஸலம் காயமாநே மநோஹரே |
ஸ்தாபயித்வா ஹரித்ராம் வை தாஸீபி: கேசவஸ்ய ச |
சூர்ணீக்ருதய ததோ மந்த்ரை: பரிஷ்காரம் சரேத் புத: ||

திருப்பதியிலே கோவிந்தராஜன் திருவாராதன க்ரமம் :-

ப்ரஹ்மாண்ட புராணத்திலே தசாத்யாயியான திருவேங்கட மாஹாத்ம்யத்திலே நாரதபகவான் :-

நாராயண மஹம் த்ரஷ்டும் கதாசித் க்ஷீரஸாகரம் |
ஆகதஸ்தத்ர சாத்ராக்ஷம் ச்வேதத்வீபம் மஹோச்ச்ரிதம் ||

இத்யாதியாலே தாம் திருப்பாற் கடலுக் கெழுந்தருளி எம்பெருமானைக் கண்டு திருவடி தொழ, எம்பெருமானும் :-

ச்ரத்தயா ச்ருயதாம் வத்ஸ! த்வயா த்ருஷ்டம் ஜகத்த்ரயம் |
ப்ரஹ்மாண்டே குத்ர வா தேசே மம வாஸோ பவே திஹ ||
விஹாரயோக்யம் சததா விச்ரமஸ்தாந முத்தமம் |
கதய த்வம் மஹாபாக யத்யஸ்தி புவி தாத்ருசம் ||

இத்யாதியாலே தமக்கு உசிதமான வாஸ ஸ்தானம் எங்கே? என்று கேட்டருள, ஸ்ரீ நாரத பகவானும்,

தவ பாதப்ரஸூதாயா: கங்காயாச்சைவ தக்ஷிணே |
திக்பாகே தண்டகாரண்யே யோஜநைர்த்விசதைர் மிதே ||
தக்ஷிணாம்புநிதேச் சாபி தக்ஷிணோதர பாககே |
பூர்வாப்தே: பச்சிமே பாகே பஞ்சபிர் யோஜநைர் மிதே ||
ரமணீய மிதம் ஸ்தாநம் க்ரீடா யோக்யம் விபோ தவ

இத்யாதியாலே அடையாளங்களோடே திருமலையே நித்யவாஸ யோக்யமென்று சொல்ல, எம்பெருமானுங் கேட்டருளி,

அதாஹ பகவாந் சேஷ மாஹூய புரத: ஸ்திதம் |
மேககம்பீரயா வாசா ஹர்ஷோத்ப புல்லவிலோசந: ||

**ஸ்ரீ பகவாநுவாச :-**

அநந்த மத்ப்ரியோ லோக ந த்வதந் யோऽஸ்தி கச்சந |
தஸ்மாந் மம ப்ரியம் கிஞ்சித் கர்த் தவ்யம் பவதா நவம் ||
ச்ரூயதாம் பவதா ஸர்வம் நாரதே நேரிதம் வச: |
க்ரீடாஸூசிதே தேசே வஸ்தவ்யமிதி மே மதி: ||
தத்ர பூத்வா கிரிவரோ பவாந் வஸது பூதலே |
த்வத்பணாமண்டலபுவி ஸ்தாதவ்யம் ரமயா ஸஹ ||

இத்யாதியாலே, திருவனந்தாழ்வானைப் பர்வதாகாரமாய் இருமென்று நியமித்து, தாமும் பெரிய பிராட்டியார் முதலான தேவிகளோடும், ஸேனைமுதலியார் முதலான ஸூரிகளோடும் அவதரிக்க வேணுமென்று திருவுள்ளமாய்,

அஹம் ஹி ஸர்வஜந்தூனாம் த்ரிஷ்டி கோசரதாம் கத: |
வஸிஷ்யாமி ச்ரியா ஸார்த்தம் ததாமீஷ்டாநி தேஹிநாம் ||

என்று தந்தாம் மலையிலே ஸகல சேதநாசேதனங்களுக்கும் ப்ரத்யக்ஷமாம்படி பெரிய பிராட்டியாரோடும் நித்ய ஸந்நிதி பண்ணி ஸர்வாபீஷ்டங்களையும் கொடுக்கிறோம் என்று ஸங்கல்பித்து,

(தொடரும்)

சிறுவர் சோலை

# நரகமும் சுவர்க்கமும்

டாக்டர். பொன். சௌரிராஜன்
திருப்பதி.

மலையனூர் என்பது ஒரு பழைய ஊர். அது இந்தியாவின் தென் கோடியில் இருந்தது. பிறகு கடல் கொந்தளிப்பில் அது மூழ்கிவிட்டது. இப்போதுள்ள கன்னியாகுமரி கடற்கரை விவேகானந்தர் பாறைக்கு அப்பால் அது மூழ்கிக் கிடக்கக்கூடும்.

அந்த ஊரில் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே குன்றையங் கிழார் என்று ஒரு சாமியார் வாழ்ந்து வந்தார். சூரியன் கீழ்த் திசையில் எழுவதற்கு முன்னேயே அவர் படுக்கையை விட்டு எழுந்துவிடுவார். அரபிக் கடல், வங்காள விரிகுடாக்கடல், பசிபிக் பெருங்கடல் மூன்றும் கலக்கும் அந்தச் சங்கமத் துறையிலே நீராடுவார். சடாமுடியிலிருந்து நீர் வழிய அங்கே அருகே கிடக்கும் ஒரு பாறைமேல் ஏறி நின்று செக்கச் செவேல் என்று கீழைக்கடலிலிருந்து மேலே எழும் கதிரவனை நோக்கித் தொழுவார். அவர் உதடுகள் மெல்ல அசையும். ஏதோ பாடல்களைப் பாடுவதாகத் தோன்றும். பிறகு நேரே கோயிலுக்குச் சென்று வணங்குவார். அலைவீசும் கடற்கரை ஓரமாக வடக்கு நோக்கிச் சிறிது தூரம் நடந்து அங்கே தென்னந் தோப்புக்குள் அமைந்திருக்கும் தன் ஆசிரமத்தை அடைவார்.

ஆசிரமத்தில் யாத்ரீகர்கள் பலர் அதற்குள் கூடியிருப்பார்கள். அவர்கள் துன்பங்களை எல்லாம் அமைதியாகக் கேட்டு வேண்டிய அறிவுரை வழங்குவார். இப்படி அவர் வாழ்வு நிகழ்ந்துகொண்டிருந்தது.

ஒருநாள் வேதபுரி என்ற ஊரிலிருந்து கண்ணன் என்பவர் தன் மனைவி நப்பின்னையுடனும் வளர்ப்பு மகன் சுடராழியுடனும் அந்தச் சங்கமத்துறைக்கு நீராட வந்தார். சாமியாரைப்பற்றிக் கேள்விப் பட்டனர். தங்களுக்குத் துன்பம் ஒன்றும் இல்லை என்றாலும் சாமியாரை 'எல்லோரையும் போலப் பார்த்துவிட்டுப் போவோமே' என்று நினைத்தனர். அப்படியே மறுநாள் காலையில் ஆசிரமத்துக்குச் சென்றனர்.

அவர்கள் அங்குப் போய்ச்சேர்ந்த போது முப்பது நாற்பது பேர் சாமியாரைச் சுற்றி உட்கார்ந்துகொண்டு என்னென்னவோ கேட்டுக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு ஆறுதல் தருமாறு அவர் அருளுரை வழங்கினார். கடைசியில் எல்லோருக்கும் பொதுவாக, "நன்மை செய்யுங்கள்; நல்லதே செய்யுங்கள்; நன்மை செய்யாவிடில் நரகமே கிடைக்கும்; சுவர்க்கத்தை அவர்கள் கனவிலும் காண இயலாது" என்று சொல்லி முடித்தார்.

அதுவரை அமைதியாக இருந்த சிறுவன் சுடராழி, திடீரென்று எழுந்து, 'அய்யா! நரகம் எப்படி இருக்கும், சுவர்க்கம் எப்படி இருக்கும்' என்று கேட்டுவிட்டுத் தன் அழகான விழிகளால் அவரை ஊடுருவிப் பார்த்தான். சாமியார் ஒன்றும் கூறத் தோன்றாமல் அந்தச் சிறுவனின் ஞான விழிகளை உற்று நோக்கினார்; தன்னை மறந்தார், கண்கள் தாமே மூடிக் கொண்டன; பேச்சு மூச்சு இல்லை.

அருகில் இருந்த அலுவலர் சிலர், 'சாமியார் சமாதியில் ஆழ்ந்து விட்டார். எல்லோரும் போய் நாளைக்கு வாருங்கள். இனிமேல் யாருடனும் பேச மாட்டார்' என்று அங்குக் கூடியிருந்த அனைவரையும் அனுப்பி விட்டனர்.

தன்னை மறந்து கிடந்த சாமியார் முன்பு, சுடராழியும் வெண் சங்கும் கைகளில் திகழ, திருமகள் உறை மார்பினனாகிய திருமால் வந்து தோன்றினார். எங்கும் 'கம்மென்று' துளசி மணங்கமழ்ந்தது. எதிரே நிற்கும் திருமாலைக் கண்டு அவன் திருவடிகளில் விழுந்து வணங்கினார் சாமியார்.

"மகனே! எழுந்திரு. உனக்கு என்ன வரவேண்டும்? கேள். எது கேட்டாலும் தருகிறேன்" என்று அருளினார் திருமால்.

''எதுவும் வேண்டாம் எம்பெருமானே! தங்கள் திவ்விய மங்களத் திருமேனி கண்டேனே! அதுவே போதும்!' என்று சொல்லவாயெடுத்தார் சாமியார். அதற்குள் அந்தச் சிறுவன் கேட்ட கேள்வி அவர் நினைவிற்கு வந்தது. உடனே திருமாலை நோக்கி,

'கடல் வண்ணா! கமலக் கண்ணா! நரகம் எப்படி இருக்கும்? சுவர்க்கம் எப்படி இருக்கும். என்னென்னவோ கேட்டிருக்கிறேன். எதில் எதிலோ படித்தும் இருக்கிறேன். ஆனால் நேரில் பார்த்து அனுபவித்து அறிந்து கொள்ள வேண்டும் கண்ணா! அருள் புரிவாயாக!' என்று வேண்டினார். திருமாலும், 'அப்படியே ஆகட்டும்!' என்று கைகாட்டி அருளினார்.

என்ன கோரம்! என்ன கொடுமை! ஒரே கூக்குரல்! ஒரே வாய்ச் சண்டை! சொல்லத் தகாத சேட்டைகள்! ஒரே கெட்ட நாற்றம்! 'ஆ! நரகத்துக்கு வந்துவிட்டோம். நன்றாகப்பார்த்துக்

கொள்வோம்!' என்று யாருக்கும் தெரியாமல் தூரத்தில் ஒதுங்கி, ஓரிடத்தில் மறைந்து நின்றுகொண்டு சாமியார் கவனித்தார்.

எலும்பும் தோலுமாக, உட்குழிந்த கண்களோடு அங்கு வம்பு வளர்த்துக் கொண்டிருந்த உருவங்களிடையே திடீரென்று அமைதி ஏற்பட்டது. அப்போது 'கணகண' என்று மணி ஓசை ஒன்று கேட்டது. எங்குப் பார்த்தாலும் திடீரென மேசைகள் போன்ற மேடைகள் தோன்றின. அந்த மேடை மேல் நல்ல நல்ல கனிகள், கற்கண்டு வகைகள், உணவுகள் பல வைக்கப்பட்டிருந்தன. 'ஓகோ சாப்பாட்டு நேரம் போலிருக்கிறது. இவ்வளவு இனிய உணவுகள் இருக்கும்போது இவர்கள் ஏன் இப்படி இளைத்துப் போயிருக்கிறார்கள்' என்று சாமியார் தனக்குள் எண்ணியவாறே அங்கு நிகழ்வதைக் கவனித்தார்.

உணவு வைக்கப்பட்டிருந்த ஒவ்வொரு மேடையையும் சுற்றிக் கூட்டம் கூட்டமாகக் கூடினர். அவற்றை ஆர்வத்தோடு உற்றுப் பார்த்தனர். நீட்டிய கைகளால் எடுத்தனர்; அழுதனர்; ஒருவர்மேல் ஒருவர் வீசி எறிந்து கொண்டு வாய்விட்டு அரற்றினர்.

சாமியாருக்கு முதலில் ஒன்றும் விளங்கவில்லை. 'ஏன் இப்படிக்கையில் எடுத்த உணவை உண்ணாமல் ஒருவர் மேல் ஒருவர் போட்டுக் கொண்டு உட்கார்ந்து அழுகின்றனர்' என்று சாமியார் நினைத்தார். தனியாக நின்று கொண்டிருந்த ஒருவரின் அருகில் போய்ப் பார்த்தார். அப்போதுதான் அவருக்கு அதன் காரணம் விளங்கிற்று. அங்கு நரகத்தில் உள்ளவர் கை ஒவ்வொன்றும் மடக்க முடியாமல் எதனாலேயோ நீட்டி வைக்கப்பட்டிருந்தது. மடக்க வாதமா? அல்லது என்ன மாயமோ! கையில் எடுத்ததை மடக்கி வாயில் வைத்துக் கொள்ள முடியாமல் அவர்கள் பட்டினியால் வாடி வருந்தினர்; அழுது புரண்டனர்; கடவுளையும் தங்களையும், எதிரில் உள்ளவர்களையும் திட்டித் தீர்த்துக் கொண்டனர்.

'கைகள் சரியானால் கவலைகள் போய்விடும். நரக வேதனை இருக்காது. கைகள் சரியில்லாமைதான் நரகம்' என்று எதனையோ கண்டு கொண்டவர் போல 'கண்ணா! நரகத்தைக் கண்டு கொண்டேன். சுவர்க்கத்தையும் காட்டியருள்க' என்று சாமியார் திருமாலைக் கேட்டுக் கொண்டார்.

மறு விநாடி சுவர்க்க வாசலில் போய் நின்றார் சாமியார். இனிய வீணாகானம். மணங் கமழ்கின்ற மல்லிகை மணம். தெய்வப் பாடல் ஒலி காற்றில் மிதந்து வந்து சாமியாரை உள்ளே அழைத்தது. மெல்ல அடி எடுத்து வைத்து உள்ளே போனார் சாமியார். முன்பு போலவே ஒரு ஓரமாக ஒதுங்கி நின்றுகொண்டு கவனித்தார். எல்லோரும் மகிழ்ச்சியாக இருந்தனர்; குழந்தை முகம் போல அனைவர் முகங்களும் பொலிவாக இருந்தன. அந்தச் சமயத்தில் நரகத்தில் கேட்டது போல 'கண கண' மணி ஓசை இங்கும் கேட்டது. 'ஓகோ சாப்பாட்டு நேரம்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டே சாமியார் கவனித்தார்.

'அய்யைய்யோ! இங்கும் அப்படியே. இங்கும் கனிகள், கற்கண்டுகள், உணவுகள் எல்லாம் மேடை மேல் வைக்கப்பட்டிருந்தன. அவற்றை எடுத்துக் கையை மடக்கி உண்ண முடியாதவாறு அவர்கள் கைகள் நீட்டி வைக்கப்பட்டிருந்தன.

என்றாலும் நரகவாசிகள் போல இவர்கள் தங்களுக்குள் சண்டை போட்டுக்கொள்ளவில்லை. உணவை பார்த்து ஓலமிட்டு அழவில்லை. மலர்ந்தமுகத்தில் மகிழ்ச்சி தாண்டவமாட இரு கைகளாலும் நிறைய உணவுப் பொருள்களை எடுத்தனர்.

'அடடா! என்ன ஆசை! என்ன பேராசை! இவர்களையும் ஆசைப் பிசாசு விடவில்லை. நரகத்தில் தின்ன முடியாது அள்ளிக் கீழே போட்டு விட்டு அழுதார்களே! இவர்களும் அப்படியே அழுவதற்கா இப்படிக் கைநிறைய அள்ளிக் கொள்கின்றனர்' என்ற சாமியார் நினைத்துக் கொண்டு சுற்றும் முற்றும் பார்த்தார்.

ஆகா! அங்கு ஒரு அற்புதக் காட்சியைச் சாமியார் கண்டு வியந்து நின்றார். நரகம் போல இங்கிருந்தவர்கள் கையில் எடுத்த கனிகளை கீழே போடவில்லை. தங்கள் வாய்க்குள் தானே வைக்க முடியாது. அடுத்தவர் வாயில் வைக்க முடியுமல்லவா! அதைத்தான் செய்தனர் சுவர்க்க வாசிகள். கண்களை அகல விரித்து எங்கும் பார்த்தேன். ஒருவர் வீணையை இன்னொருவர் மீட்டிக்கொண்டிருந்தனர். ஒருவர் கிண்ணத்தை மற்றொருவர் நிரப்பிக் கொண்டிருந்தனர். ஒருவர் முகத்தில் தோன்றிய வியர்வையை இன்னொருவர் துடைத்துக் கொண்டிருந்தனர்.

'ஆ! கண்டு கொண்டேன், சுவர்க்கத்தைக் கண்டுகொண்டேன் கண்ணா! ஒருவர்க்கு ஒருவர் உதவுதல், ஒருவர் பசியை இன்னொருவர் ஆற்றுதல், ஒருவர் இன்பத்திற்கு மற்றொருவர் துணையாதல், ஒருவர் துயரைப் பிறிதொருவர் துடைத்தல். ஆம்! கண்டு கொண்டேன்! சுவர்க்கத்தைக் கண்டு கொண்டேன்!' என்றபோது அவர் செவியில் சங்கநாதம் கேட்டது.

'ஆம், மகனே! எல்லாம் தனக்கு என்ற நினைவே நரகம்! எல்லாம் உனக்கு உனக்கு என வழங்குவதே சுவர்க்கம்!' என்பதுபோல் இருந்தது அந்தச் சங்கொலி.

மெல்ல சாமியார் கண்களைத் திறந்தார். அருகில் அவரையே பார்த்துகொண்டிருந்த சிஷ்யன் ஒருவன் 'சுவாமி தியானத்திலிருந்து எழுந்து விட்டார் பால் கொடுங்கள்' என்று கேட்டுக் கொண்டே மடைப் பள்ளி உள்ளே போனான். சாமியார் புன்னகை செய்தபடியே எழுந்து உட்கார்ந்தார். 

# படி அளந்த அடி

திரு. ஆ. பக்தவச்சலம்,
M.A, B.Sc, B.Ed, D.H.E.
குடியாத்தம்.

“எவ்வெப்பொழுது தர்மத்திற்குத் தாழ்வு ஏற்பட்டு அதர்மம் எழுச்சி பெறுகிறதோ, அவ்வப்பொழுதெல்லாம் நானே என்னைப் பிறப்பித்துக் கொள்ளுகிறேன். நல்லோரைக் காப்பதற்கும், தீயோரை மாய்ப்பதற்கும், தர்மத்தை நிலை நிறுத்துவதற்கும் நான் ஒவ்வாரு யுகத்திலும் அவதரிக்கின்றேன்'' என்று கண்ணன் கூறுகின்றான்.

‘அவதாரம்’ என்ற சொல் மேலே இருந்து கீழே இறங்குதல் எனும் பொருள்படும். இதை வேதாந்தம், ‘‘மாயைக்கு உட்பட்ட விவகார உலகில் உள்ளவர்களை உய்விப்பதற்காகப் பிரம்மமே மாயையுடன் கூடி உலகில் உற்பவிப்பது தான் அவதாரம்'' என்கின்றது. சித்தாந்தம் “மனிதனை கடவுளாக்குவதற்காகக் கடவுள் மனிதனாகிறார்'' என்கிறது.

அகத்தே கருத்துப் புறத்தே வெளுத்திருக்கும் இவ்வுலக மக்களையெல்லாம் திருத்தி உய்விப்பதற்கே இறைவன் அவதரிக்கின்றார். அப்படி ஏற்பட்ட பல அவதாரங்களில் ஒன்று தான் ‘வாமன அவதாரம்’ திருமாமகள் மார்பன் வாமனனாக அவதரித்து மாவலிச் சக்கரவர்த்தியிடம் மூன்று அடி மண் கேட்டார். ஓர் அடியால் இந்த படி (பூமி) முழுவதையும் அளந்து தனக்கே சொந்தமாக்கிக் கொண்டார். இதைஅருணகிரிநாதர்,

‘‘ படி மாவலியால் மூவடி கேட்டன்று
மூதண்டகூட
முகடு முட்டச் சேவடி நீட்டும்
பெருமான் ''

என அழகாகப் பாடியுள்ளார்.

அரங்கத்தம்மானுக்கு இருமாலை சூடிக்கொடுத்த பெருமாட்டி ஆண்டாள் நாச்சியாரும் ‘‘ஓங்கி உலகளந்த உத்தமன்'' என்றும், ‘‘அன்றிவ்வுலகம் அளந்தாய்! அடிபோற்றி’ என்றும் திருமாமகள் கேள்வன் இப்பூவுலகைத் (படியை) தமது ஓர் அடியால் அளந்து தமக்கே உரிமையாக்கிக் கொண்டதைப் பாடியுள்ளார்.

எனவே இப்பூவுலகம் முழுவதும் செம்பெருந் தாமரைக் கண்ணனுக்கே சொந்தம் என்பது நமக்கு நன்கு விளங்குகின்றது. இருந்தும் ஓர் அடி மண்ணிற்காகச் சகோதரர்கள் இருவர் சண்டையிட்டு வெட்டி மடிகின்றனர். இத்தகைய “அறியாமையில் மூழ்கி உள்ள மக்களைப்பார்த்து இறைவன் சிரிக்கின்றான்'' என கீதை இயம்புகிறது.

வாடகை வீட்டில் குடித்தனம் செய்வது போன்றதே இவ்வுலக வாழ்க்கையும். வீட்டின் உரிமையாளர் விரும்பும் போது குடியிருப்பவர் அவ்வீட்டை விட்டு விலகுவது போல, நாமும் சில நாட்கள் இவ்வுலகில் ‘எனது’ என்று சிலவற்றை குத்தகைக்கு அனுபவித்துவிட்டுப் பிறகு விட்டுச் செல்கின்றோம். நம் வீடு, நமது நிலம், நமது உடமைகள் என்பதெல்லாம் தவறான எண்ணமே ஆகும். ஏன்? அன்றே இவ்வுலகத்தையெல்லாம் தமது உடமையாக்கிக் கொண்டவன் இறைவனல்லவா? அப்படி இருக்கும் போது நாம் எப்படி உரிமை கொண்டாட முடியும்?

எனவே, நமது என்று நாம் எண்ணிக் கொண்டிருப்பவை யாவும் உண்மையில் கண்ணனுடையதே ஆகும். இந்த உண்மையை யாவரும் புரிந்து கொண்டு வாழ்க்கை நடத்தினால் சச்சரவுகட்கே இடமில்லாமல் போய் விடும். நம்முடைய உரிமைப் பொருள் ‘எல்லாக்களுமங்களும்செய்யும் எல்லையில் மாயனே’ ஆகும்.

மனிதனைப் பந்தப் படுத்துவது ‘நான்’ எனும் அகப்பற்றும், ‘எனது’ எனும் புறப்பற்றுமே ஆகும். இந்த இருவகைப் பற்றுக்களும் அற்றால் தான் ஆன்மா விடுதலை அடையமுடியும். “அற்றது பற்றெனில் உற்றது வீடு'' என்பார் நம்மாழ்வார். இத்தகைய இருவகைப் பற்றுக்களை அகற்றும் வழியையே நமக்கு “படிஅளந்த அடி'' விளக்குகின்றது.

ஓர் மரத்தை வெட்டி வீழ்த்த வேண்டுமாயின் முதலில் அதனுடைய பக்க வேர்களையெல்லாம் வெட்டிக் கொண்டே வர வேண்டும். முடிவில் ஆணி வேர் மட்டும் தனித்து நிற்க இயலாமல் தானாகவே அறுந்துவிடும். பின் மரமும் சாய்ந்து விடும். அதைப் போலவே நாமும் ‘எனது’ எனும் புறப்பற்றை முதலில் நீக்க முயற்சிக்க வேண்டும். புறப்பற்று நீங்கினால் ‘நான்’ எனும் அகப்பற்று தானாகவே நீங்கிவிடும். நான் எனும் அகப்பற்று அற்ற இடத்தில்தான் மேகவண்ணன் தன்னை வெளிப்படுத்துவான். இதையே சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள்,

‘‘ வான்காணா மறைகாணா மலரோன்
காணான்
நான் காணா இடத்தனைக் காண்போம்
என்று
நல்லோர்கள் நவில்கின்ற நலமே''

என்று பாடுகின்றார்.

எனவே ‘நான்’ எனும் அகப்பற்றை அடியோடு அகழ்ந்தெடுக்க வேண்டியது அவயசியமாகும், அதற்கு முதற்கண் புறப்பற்றாகிய ‘எனது’ என்பதை அகற்ற முற்பட வேண்டும். அதற்கான வழியைத்தான் ‘படி அளந்த அடி' நமக்குத் தெற்றென விளக்குகின்றது.

அறியாமையால் இத்தனை நாட்களாய் ‘எனது’ ‘எனது’ என்று கருதி வந்தனவற்றை விட்டு விடுவது மிகவும் கடினமே ஆகும். ஆனால் எல்லாம்படி அளந்த அடியை உடைய கார்மேக வண்ணனுடையதே என்று நாம் உண்மையை உணரத் தலைப் பட்டோமானால் ‘எனது’ எனும்

புறப்பற்று சிறிது சிறிதாக விலக ஆரம்பிக்கும். காலப் போக்கில் முற்றிலும் 'எனது' என்பது அகன்று முடிவில் 'நான்' எனும் அகப்பற்றும் தானகவே அழிந்தொழிந்துவிடும்.

இப்படி எல்லாம் கண்ணனுடையதே என்று எண்ணி வாழும் உள்ளத்தில் காமம், லோபம், வெகுளி, கழிபெரும் பொய் எனும் குப்பைகள் காணப்படாது. அன்பும் அருளுமே அகலாது குடிகொள்ளும். அத்தகைய அன்பு நிறைந்துள்ள இடத்தில் தோன்றும் தன்மையன் அல்லவா இறைவன்!

திருவள்ளுவரும் ''பற்று விடற்கு பற்றுக பற்றற்றான் பற்றினை'' என் பதை அறிக. திருமாலின் திருவடி இவ்வுலகையெல்லாம் தனது என்று அறிவுறுத்துகின்றதல்லவா? அத்திருவடி தானே நமக்கு அகப்பற்றும் புறப்பற்றும் நீக்கி அன்பும் அருளும் விளங்க வழி வகுத்துள்ளது? அத்தகைய ''படி அளந்த அடியை' ப் பற்றி நாம் செய்யும் எல்லாச் செயல்களையும் அத்திருவடியை உடையவனுக்கே அர்ப்பணித்துவிட வேண்டும்.

பலாப்பழத்தை அறுப்பவன் கைகளில் எண்ணெய் பூசிக் கொண்டு அறுப்பான். அதனல் அவன் கைகளில் பலாப்பழத்தில் உள்ள 'பசை' ஒட்டுவதில்லை. அதைப் போல நாம் செய்யும் எல்லாக் கருமங்களுக்கும் காரணன் கண்ணனே என்று எண்ணிச் செய்தால் வினைகள் நம்மைப் பற்றுவதில்லை. அதனல் பிறவியும் தொடருவதில்லை.

எனவே புறப்பற்றும், அகப்பற்றும் நீங்கவும், இருவினைகள் நம்மைத் தொடராமலிருக்கவும் ''படி அளந்த அடியே'' நமக்குத் துணை ஆகும். உயர்வு அற உயர் நலம் உடையவனும் அயர்வு அறும் அமரர்கள் அதிபதியும், மயர்வு அற மதி நலம் அருளும் தகைமையனும் ஆகிய கொண்டல் வண்ணனுடைய துயர் அறு சுடர் அடியை—படி அளந்த அடியைப் போற்றி வணங்குவோமாக!



(19-ம் பக்கத் தொடர்ச்சி)

போய்ப் பாஷ்யம் செய்து, பத்ரி நாராயண க்ஷேத்திரத்திலே அந்தக் கோவிலைப் புனருத்தாரணம் செய்து (அதன் அடையாளமாக இன்றும் நம்பூதிரி பூஜையே அங்கு நடந்து வருகிறது), நேபாளம் சென்று அங்கும் பூஜை முறைகளைச் சரி செய்தார். அதன் அடையாளமாக இன்றும் தக்ஷிணத்தில் இருந்துவரும், (மைசூர், ஆந்திரா இந்தப் பகுதியிலிருந்து போகக் கூடியவர்களே பூஜை செய்யும்படி) பூஜை முறைகளையே கடைப்பிடித்து வருகிறார்கள். இதைப் பார்த்தால் பாஷையோ, மதமோ, பண்பாடோ இதெல்லாம் எப்படி இருந்தாலும்கூட ஒரு சமயம், ஒரு தத்துவம், ஒரு கலாசாரம் - பாரதிய கலாசாரம்—இந்து கலாசாரம் ஒன்று என்பதை அந்தக் காலத்திலிருந்தே நமக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள். ஆகையினலே நாமெல்லாரும் உலக திருஷ்டியிலே பார்த்தால் கூடத் தேசிய ஒருமைப்பாடு என்று அந்த முறையிலே கூட ஆதிசங்கரரை நினைத்துக் கொள்ள வேண்டிய தேவை இன்று இருக்கிறது. தத்துவ ரீதியிலே பார்த்தாலும், அநேக மூர்த்திகளை வைத்துக்கொண்டு அது பெரிதா - இது பெரிதா, சிவன் பெரிதா, விஷ்ணு பெரிதா என்று நாம் யோசனை பண்ணிக்கொண்டு இருக்கின்றோம். ஆதிசங்கரர் பெருமான்-எல்லா மூர்த்திகளையும் ஒன்றுகப் பாவித்து, அதற்குமேல் ஒரு பரம்பொருள் இருக்கிறது, அதனை நீ நினைத்துக்கொள். அந்தப் பரம்பொருள்தான் இத்தனைக்குள்ளேயும் ஊடுருவி நிற்கிறது – என்று சொல்லியிருக்கிறார். ஆகையினலே, ஈசுவர வழிபாடு முறைகளிலேயும், பேத புத்தியில்லாமல் ஒரே பரமாத்ம திருஷ்டியைப் பார்ப்பதற்குள்ள தொரு தன்மைகளையும், தேசிய ஒருமைப்பாட்டு நிலைகளிலேயும், வேதாந்த ரீதியிலும் உலகம்கூட வியக்கும்படியான - போற்றும்படியான அந்த அத்வைதத்தைச் சொன்னவர் அந்த மஹா புருஷர். அவருடைய ஜயந்தி விழாவிலே நாம் அவருக்குச் செய்யக் கூடிய முக்கியமான கடமை, அவர் எவ்வளவு ஸ்தோத்திரம் பண்ணியிருப்பாரோ, எவ்வளவு நூல்கள் எழுதியிருப்பாரோ, அவற்றை ஒரு தடவை மனத்திலே நினைத்து அந்த வழியிலே நடந்தால், சிறிதளவாவது முயற்சி செய்தால் அதுதான் அவருக்கு நாம் கொண்டாடும் ஜயந்தி விழாவாகும்.

ஆகையினலே சங்கர ஜயந்தியன்று ஒவ்வொருவரும் அவருடைய குரு புகழ் பாடுவதோடு கூட, அவர் செய்த நூல்களைப் படிப்பதோடுகூட, அவர் அருளிய தத்துவத்தை நாம் அறிந்து கொள்வதோடுகூட அதன் பிரகாரம் வாழ்க்கையிலே நாம் கடைப்பிடிப்பதற்கும் சிறிதளவாவது முயற்சி செய்தால் அதுதான் ஆதி சங்கரர் பெருமானுக்கு நாம் செய்யும் பெரும் தொண்டாகும்.

அன்றைக்கு அவர் செய்த தொண்டும், அன்றைக்கு அவர் ஏற்றி வைத்த தீபமும் இன்றும் பரம்பரையாக நம் நாட்டிலே இருக்கின்றன. அந்த ஜோதியினுடைய - அந்தப் பிரகாசத்தினுடைய ஒளியை நாம் எல்லோரும் பெற்று நம் வாழ்வைப் பிரகாசமாக்கிக் கொள்ள வேண்டும். உலக முழுவதுக்கும் ஆதிசங்கரருடைய தேதாந்த தத்துவமும் ஆதிசங்கரரும் சொந்தம். அதனலேயே ஒவ்வொருவரும் ஆதிசங்கரருடைய தத்துவங்களைத் தெரிந்துகொண்டு, அஞ்ஞானங்களைப் போக்கிக் கொண்டு ஞான தீபத்தை மனத்திலே ஏற்றிக் கொண்டு சாந்தமாகவும் சுகமாகவும் ஆனந்தமாகவும் வாழவேண்டும்!

ஸ்ருதி ஸ்ம்ருதி புராணனும்
ஆலயம் கருணலயம்
நமாமி பகவத்பாத ஸங்கரம் லோக
ஸங்கரம்.

நாராயண!

# வைணவ வினா - விடை

வித்வான் தஞ்சை ஸ்ரீ. உ. வே. என். எஸ். தாதாசார்யர்.

**"அதர்வண வேதம்" சிறப்பென்ன ?**

இதில் காணப்படும் மந்திரங்கள் அஸ்திர— சஸ்திரங்களைப் பற்றியவை. அரசர்களுக்கு மிகவும் பயன்படுபவை. இதில் 20 காண்டங்களும் 5987 மந்திரங்களும் அடங்கியுள்ளன. அதர்வண வேதத்தை வைதிகப் பெரியோர்கள் மிகச் சிறப்புடன் பேசார்கள். இதை தவிர்த்த மற்றைய மூன்று வேதங்களை "த்ரயீ" என ஒன்றுபடப் பேசுவார்கள்.

**"தருமம்" என்றால் என்ன?**

எது உலகத்தைத்தாங்கி இருக்கிறதோ அதனைத் தருமம் என்பார்கள். "தருமம் தலைகாக்கும்" என்ற பழமொழியும், இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டதே. பொருள்—சொல் இவைகளின் உண்மை நிலை, தீக்கை, தவம், பிரமம், வேள்வி முதலியன தருமத்தின் வடிவமாகும். வேதமிடும் ஆணையைத் தருமம் எனவும் இறைவனையே தருமம் எனவும் விளக்குவர்.

**உபநிடதம் என்றால் என்ன ?**

வேதத்தை-கரும காண்டம், உபாஸனா காண்டம், ஞான காண்டம் என மூன்று பெரும் பகுதிகளாகப் பிரித்தார்கள். இப்பிரிவின் கடைசிப் பகுதியானபடியால் ஞான காண்டத்தை வேத+அந்தம்= வேதாந்தம் என அழைக்கிறார்கள். இதனையே உபநிடதம் எனவும் அழைக்கிறார்கள். இதனை அத்யாத்மம் எனவும், சாரீரகம் எனவும் கூறுவர். கடவுள் பக்கம் நிறுத்தவல்லது எனக் கருத்து.

**உபநிடதங்கள் எவ்வளவு ?**

எல்லா வேதப் பகுதிகளுக்கும் தனித்தனியே உபநிடதங்கள் உண்டு. இருப்பினும் 108 உபநிடதங்களே இன்று கிடைப்பன. அவைகளுள் மிகவும் போற்றப்படுபவை 10 ஆகும். இதனை "தசோபநிடதங்கள்" என்பார்கள். அவை:—

1. ஈசாவாஸ்யம், 2. கேனம், 3. கடம், 4. பிரச்சினம், 5. முண்டகம், 6. மாண்டூக்யம், 7. தைத்தரீயம், 8. ஐதரேயம், 9. சாந்தோக்கியம், 10. பிரகதாரணியம் என்பன. உபநிஷத், பிரம்ம சூத்திரம், கீதை என்ற மூன்று நூல்களுக்கும் வேதாந்த வழக்கில் "ப்ரஸ்தானத்ரயம்" எனப் பெயராகும்.

**உபநிடதங்களின் தீர்ந்த கருத்தென்ன ?**

1. ஆன்மநலன், 2. புறவாழ்க்கையில் நாக்கில் நெய் போல் பற்றற்ற நிலை, 3. நிலைத்த நல உணர்வு, 4. அகந்தை – மமதையை அகற்றல், 5. எளிய வாழ்க்கை, 6. ஆசாரியன் அருள், 7. பேரின்ப வாழ்வு, 8. மனச்சாந்தி, 9. நல்லொழுக்கம், 10. இறைப்பற்று என்பன. சாஸ்திர நூல்களிலும், ஆசானிடமும் பூர்ண நம்பிக்கையே அடிப்படைத்தேவை.

**இந்து மதத்திற்கு ஆதாரங்கள் யாவை ?**

பதினெண் புராணங்கள், பாகவதம், இராமாயணம், பாரதம், பகவத் கீதை, தேவார திருவாசகங்கள், நாலாயிரத் திவ்விய பிரபந்தங்கள், ஆகமங்கள் தர்ம சாஸ்திரங்கள் முதலியன.

**வைவணக் கொள்கைகள் சிறப்பாக அமைந்த புராணம் எது ?**

வேத வியாசருடைய தந்தையான ஸ்ரீ பராசர பகவானால் மைத்திரேயர் என்பவருக்காக விரிவாகக் கூறப்பட்ட "விஷ்ணு புராணம்" என்பது. இதனைப் "புராண ரத்தினம்" எனவும் அழைப்பர். இதில் கிருஷ்ண சரித்திரத்திற்கு முக்கியமான இடம்.

**பகவத் கீதையின் சிறப்பென்ன ?**

பாரதப் போரில் மயங்கி இருந்த அருச்சுனனைத் தெளிவிக்கக் கண்ணபிரானால் திருவாய் மலர்ந்தருளப்பட்ட நூலுக்குப் பகவத் கீதை எனப் பெயர். பகவத் கீதையில் 18 அத்யாயங்கள் உள்ளன. இப்பதினெட்டையும் மூன்று கூறாக்கி த்ரிஷட்கம் எனவும் கீதையை அழைப்பார்கள். உலகெங்கும் புகழ் பெற்ற மாபெரும் நூலிதுவே. இப்பகுதி மஹாபாரதத்தில் பீஷ்ம பருவாவில் 25-வது அத்தியாயம் துவங்கி 42-வது அத்தியாயம் வரைஉள்ளது. இதில் கண்ணன் அருளியது 620 செய்யுள் சஞ்ஜயன் கூறியது 67. அருச்சனன் கூறியது 57. திருதராஷ்டிரன் கூறியது. 1. ஆக 745 செய்யுள் கொண்ட நூலாகும். இது "ப்ரஸ்தானத்ரயம்" என்ற மூன்று வேதாந்த நூல்களில் இதுவும் ஒன்று.

**முக்கியமான மதங்கள் யாவை ?**

வைதிக நெறியில் பல சித்தாந்தங்கள் மதங்கள் என்ற பெயரில் நடைமுறையில் இருப்பினும், ஸ்ரீ சங்கராசாரியரால் பரப்பப்பட்ட அத்வைதமும், ஸ்ரீஇராமானுசாரல் பரப்பப்பட்ட விசிஷ்டாத்துவைதமும் ஆனந்த தீர்த்தர் என்ற ஸ்ரீ மத்துவாசாரியரால் பரப்பப்பட்ட துவைதமும் முக்கியமானவை. நீலகண்டர் என்பவரால் விளக்கப்பட்ட சிவாத்வைதமும் உண்டு.

**அத்துவைதம் என்றால் என்ன?**

துவைதம் என்றால் இரண்டுவிதம்எனப்பொருள். இரண்டு விதமில்லாதது அத்துவைதம். அதாவது பிரம்மம். ஜீவன் என்ற இரண்டு தத்துவங்கள் இல்லை பிரம்மம் என்ற ஒரே தத்துவம் உண்மையாக உள்ளது. ஜீவனும் உலகமும் பொய். கண்களுக்கு இவை உண்மை எனத்தோன்றுவதை "ப்ராதிபாஸிகம்", என்பார்கள். மற்றும் வ்யாவஹாரியும், பாமார்த் எனவும் பிரிவில் வழங்கும்,

# நாத உபாஸனை

கலியுகத்தில் இறைவனை அடைய வேண்டுமானால் கடுமையான விரதங்கள் தேவையில்லை. ஸ்ரீ தியாகப்ரம்மம் சொல்கிறார். "கடவுளை இசையால் வழிபடுங்கள்; ராகங்களினால் வழிபடுங்கள், அது ஒன்றே அவனை வயப்படுத்தும்" என்கிறார்.

இசையே இறைவன்! இறைவனே இசைமயமாக விளங்குகின்றான். சுத்தமான இசையால் கல்லும் கனியாகிறது.

இசையால் வசமாகா இதயம் எது? நாம் வசிக்கின்ற பூமி மிகப் பெரியது. அதைவிட இந்த பூமியைப் போன்ற கோள்கள் பல சூரியனைச் சுற்றுகின்றன. எண்ணற்ற சூரியன்கள் வானத்தில் உலா வருகின்றன. இவைகளின் தொகுப்பை அண்டம் என்கிறோம். பேரண்டம் (Universe) என்கிறோம். பிரபஞ்சம் என்கிறோம். பிரம்மம் என்கிறோம்.

ஆனால் இந்த பிரம்மம் நாதத்திலிருந்து தான் ஜனித்தது.

ஓம்காரமான அந்த நாத ஒலியின் தொனியிலிருந்து பிறந்தது தான் உலகம்-அதிலுள்ள ஜீவன்கள்!

இறைவனை நாதஸ்வரூபமாக வர்ணித்தார்கள் நமது முன்னோர்கள்.

கிருஷ்ணன் குழலோடு கானமிசைக்கிறான். அந்தக் காட்சியை பெரியாழ்வார் எவ்வளவு அற்புதமாகப் பாடுகிறார்.

சின்னஞ் சிறு விரல்கள் அந்தக் குழலைத் தடவிப் பரிமாறுகிறதாம். செங்கண் கோட, சிவந்ததாய் கொப்பளிக்கிறதாம். புருவங்கள் அழகாக நெரிந்து மேலேறுகிறதாம். அந்த கிருஷ்ண கானம் கேட்டு பறவைகள் எல்லாம் கூடு திறந்து வந்து காலடியில் படுக்கிறதாம். பசுமாடுகள் இயற்கையான செயலாகிய காதினைக் கூட ஆட்ட மறந்து இசையில் மயங்கிக் கிடக்கிறதாம்.

நமது இந்து மதத்தில் இசைக்கு முக்கியமான இடம் உண்டு.

| | | |
|---|---|---|
| கலைமகள் | — | வீணை |
| சிவன் | — | உடுக்கை |
| நாரதர் | — | தம்புரா |
| நந்தி | — | மத்தளம் |

இப்படி இந்துமதக் கடவுள்கள் எல்லாருமே இசையோடுதான் உருவகப்படுத்தப் பட்டிருக்கின்றனர்.

சங்கீதம் மனதை இளகச் செய்கிறது.

தாலாட்டு -
சோகம் -
அழுகை -
காமரஸம் -
காதல் -
கடவுள் -
நெகிழ்ச்சி -

திரு. எஸ். கோகுலாச்சாரி,
புவனகிரி.

நாம் அன்றாட வாழ்வில் அனுபவிக்கும் அத்தனை உணர்ச்சிகளும் சங்கீதமே - ராகங்களேயாகும்.

அறிவற்ற ஜடப்பொருள்களைக்கூட இசை தன்வயப்படுத்துகிறது. அப்படிப்பட்ட இசையைப் பற்றி காஞ்சிப் பெரியவர் ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரியார் இப்படிக் குறிப்பிடுகிறார்:

"பராசக்தியை ஸங்கீத மூர்த்தியாக பாவிக்கும் போது அவளுக்குப் பெயர் சியாமளா. சாந்த மயமாகவும் குழைந்த உள்ளத்தோடும் உள்ள சியாமளா தேவியைத் தியானித்தால் (அதாவது இசையை தியானிக்கவேண்டும். ஆரம்பத்தில் சொல்லியதுபோல் தியாகப்பிரம்மம் கூறியதும் இதைத்தானே!) அவள் பக்தர்களுக்குக் கருணையைப் பொழிவாள்.

தெய்வீகமான ஸங்கீதம் ததும்பும் சந்நிதியில் சாந்தமும் ஆனந்தமும் தாமாகவே பொங்கும்.

ஸங்கீதத்தில் கிட்டுவது மோக்ஷ மார்க்கம். நம் மனசைத் தெய்வீகமான ஸங்கீதத்தில் ஊற வைத்து அதிலேயே கரைந்து போகச் செய்தால் கஷ்டமில்லாமல் ஈசுவரனை அநுபவிக்கலாம்.

மேலும், நாம் பாடி அநுபவிக்கும் போதே, இந்த அனுபவத்தை கேட்பவனுக்கும் தந்து விடலாம். (இசையின் ஒப்பற்ற மகத்துவமே அது தானே) வேறு எந்தச் சாதனையிலும் பிறத்தியாருக்கு இப்படிச் சமமான அனுபவ ஆனந்தம் தரமுடியாது, ஸங்கீதம் என்ற மார்க்கத்தின் மூலம் தங்கள் இருதயங்களைப் பரமேசுவரனிடம் சமர்ப்பணம் செய்த ஸ்ரீ தியாகராஜர் போன்ற பக்தர்கள் பலர்."

இனி இவ்வளவு சிறப்பு வாய்ந்த சங்கீதத்தைப் பற்றி சில அடிப்படையான விபரங்களை அறிந்து கொள்வோமா?

உலகமெல்லாம் படைத்த பிரமதேவன் செவிக்கு இன்பத்தைக் கொடுக்குமபடியான நாதத்தையே ஆதாரமாகக் கொண்டான்.

சங்கீதமானது அடிப்படையில் மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. (1) நிருத்தியம் (2) கீதம் (3) வாத்தியம்

இராகம், சுரம், தாளம் என்ற இம்மூன்றின் சேர்க்கையே சங்கீதம்.

மேலும் கீதம் என்பது கானம் எனப்படும். அதிலும் இரண்டு வகை. ஒன்று தாளக்கட்டுக்கு அடங்

கிய சங்கீதம். இதற்கு சங்கீத வல்லு னர்கள் 'நிபத்தம்' என்று கூறுவர்,

தாளக் கட்டுப்பாடுஇல்லாத இராகம், தானம் போன்றவை இரண்டாவது வகை. 'அநிபத்தம்' என்பார்கள்,

தமிழை முத்தமிழ் என்பார்கள். இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத் தமிழ். தமிழிலும் இசைக்கு விதி முறைகள் உண்டு.

'பாவோ டணைதலால்
இசையென்றார் பண்ணென்றார்'
'பாடலும் பாணியும் தூக்கும்
கூடிய நெறியே இசை.'

இசையைப் பற்றிப் பேசும் பழந் தமிழ்ப் பாடல்களில் சில வரிகள் இவை.

பாணி என்றால் தாளம்;

தூக்கு என்பது காலப்ரமாணம். (தாள உறுப்புக்களிடையே நிகழும் கால அளவு)

ஏழிசை வரிசையை 'கோவை' என்றழைத்தனர். இதோ அந்த வரிசை.

| தமிழ்ப் பெயர்கள் | குறியீடு | தற்சமயம் வழங்கும் பெயர்கள் | குறியீடு |
|---|---|---|---|
| குரல் | ஆ | சட்ஜம் | ச |
| துத்தம் | ஈ | ரிஷபம் | ரி |
| கைக்கிளை | ஊ | காந்தாரம் | க |
| உழை | ஏ | மத்யமம் | ம |
| கிளி | ஐ | பஞ்சமம் | ப |
| விளரி | ஓ | தைவதம் | த |
| தாரம் | ஔ | நிஷாதம் | நி |

'ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ எனும் இவ்வே ழெழுத்தும் ஏழிசைக் குரிய' என்பது திவாகரம்.

இனி சங்கீத நூல்களில் காணப் படும் சில வார்த்தைகளுக்கு எளிய விளக்கங்களைக் காண்போம்.

சங்கீதத்தின் அடிப்படை நாதம். காற்று அக்கினி இரண்டின் சேர்க்கையே நாதம் எனப்படும். இந்த நாதம் ப்ரணவ சொரூபமானது. ஓங்கார வடிவமானது ப்ரணவம். அகர உகர மகரம் சேர்ந்தது. இந்த ப்ரணவமே திரிமூர்த்தியின் சொரூபம்.

அகரம்–விஷ்ணு, உகரம்–பிரமன் மகரம்–ருத்ரன்.

சங்கீதத்தின் பல பிரிவுகளில் ஒன்று சுரம். கேட்ட மாத்திரத்திலேயேமனதுக்குஒருசந்தோஷத்தைத் தரும் ஒலியே சுரம் எனப்படும். ஸ்ருதிகளின் சேர்க்கையினால் சுரத்திற்கு ரஞ்சனையேற்படுகிறது.

ஸப்த ஸ்வரங்களின் இடமே அந்தந்த இராகங்களின் சுரத்தானங்களாகும். சுரத்தானம் மொத்தம் பன்னிரண்டு. அவைகள் ஒவ்வோர் ராகத்திற்கும் ஏற்றபடி ஒவ்வொரு சுரங்களாக மாறிவரும்.

ஸ்ருதி என்பது என்ன? நாம் பாடும்போதோ, வாத்தியங்களை வாசிக்கும் பொழுதோ ஆதாரமாக வைத்துக்கொள்ளும் மத்திம ஸ்தாயி சட்சத்திற்கு ஸ்ருதி என்று பெயர்.

ஒரு ஸ்வரக் கோர்வையை (ச முதல் நி வரை) மூன்று தொனியில் உரத்தும், மெதுவாகவும், மத்திமமாகவும் உச்சரிக்கலாம். சங்கீதத்திற்கு ஒரு குழைவைக் கொடுப்பது இந்த மாற்றங்களேயாகும். இதற்கு 'ஸ்தாயி' என்று பெயர்.

இந்துஸ்தானி சங்கீதத்திலும் சரி, கர்நாடக சங்கீதத்திலும் சரி ஒரே ஸ்வரங்களும் ஒரே ஸ்ருதிகளும் உபயோகப்படுத்தப்படுகின்றன. பாடும் பாணியில் உள்ள வேறுபாடு தவிர இரண்டிலும் பல ராகங்கள் ஒரே மாதிரியானவை என்பது நாம் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம்.

கர்நாடக சங்கீதத்தில் மொத்தம் 72 மேளகர்த்தா ராகங்கள் இருக்கின்றன. இவைகளுக்கு 'தாய்ராகம்' என்று பெயர். ஏழு ஸ்வரங்களும் பூர்த்தியாக இருக்கும். ஒவ்வொரு மேளகர்த்தா ராகங்களுக்கும் 'சேய் ராகங்கள்' அல்லது 'ஜன்ய ராகங்கள்' உண்டு.

ராகங்களிலிருந்து அது பாடும் முறைகளில் தோன்றும் உணர்ச்சியை 'ரசம்' என்று கூறுவார்கள். அந்த உணர்ச்சிகளைக் கூட பிரித்து ஒன்பது வகையாக்கி 'நவரசம்' என்று பெயரும் சூட்டியிருக்கிறார்கள் நமது முன்னோர்கள்.

ஸ்ரீ கோமளவல்லித்தாயாருடன், ஸ்ரீ சக்கரபாணி சுவாமிகள் - கும்பகோணம்.
திரு. வி. எஸ். ஸ்ரீநிவாசன் - தஞ்சை.



## தி. தி. தேவஸ்தான தமிழ் சமய வெளியீடுகள்

| | ரூ. | பை |
|---|---|---|
| அஷ்டோத்ர சகஸ்ரநாம அர்ச்சனை ... | 1 | 00 |
| பால பாகவதம் (செவ்வைச் சூடுவார்) முதல் பாகம் ... | 4 | 00 |
| ,, ,, இரண்டாம் பாகம் ... | 4 | 00 |
| திருமலை வழிகாட்டி ... | 0 | 25 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மகாத்மியம் (தலபுராணம்) ... | 2 | 00 |
| ஸித்தாந்த த்ரய சங்க்ரஹம் (திரு. ஓ. வி. கபிஸ்தலம் (தொகுத்தவர்) தேசிகாச்சார்யா) ... | 2 | 50 |
| ஸ்ரீராமஜெயத் திருப்புகழ் பகுதி I, பகுதி II. (Each) (தொகுத்தவர்) (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) ... | 3 | 00 |
| சர்வ தேவதா பூஜா விதானம் - தி. தி. தே - ... | 0 | 70 |
| ஸுப்ரபாதம் (பொருளுடன்) (அச்சில்) ,, ... | 0 | 50 |
| ஸுப்ரபாதம் ,, ... | 0 | 15 |
| செம்பொருள் (எஸ். கிருஷ்ணவேணி அம்மையார்) ... | 1 | 50 |
| ஸ்ரீநிவாச கல்யாணம் (வண்ணப்படங்களுடன்) ... | 11 | 50 |
| திருக்குறள் (பொருட்பால்) திரு.டி.பி. பழனியப்பபிள்ளை ... | 7 | 50 |
| ,, (காமத்துப்பால்) (தொகுத்தவர்) ... | 4 | 00 |
| திருவாய்மொழி { கே. பாலசுந்தர நாயக்கர் } பாகம் 1 ... | 7 | 50 |
| { விளக்கவுரையுடன் } பாகம் 2 ... | 10 | 50 |
| யாப்பொளி (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 3 | 50 |
| ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி ஸுப்ரபாதம் (திரு. எம். வி. ராமநாத கனபாடிகள் ... | 0 | 20 |
| இந்து சமயக் கையேடு ... | 1 | 50 |
| ஏழுமலை யாத்திரை (திரு. டி.கே. நாராயணன்) மலிவுப்பதிப்பு ... | 0 | 75 |
| சித்திர ஸுப்ரபாதம் (வண்ணப்படங்களுடன்) தி.தி.தே - ... | 8 | 00 |
| சித்திர திருப்பாவை (வண்ணப் படங்களுடன்) தி.தி.தே- ... | 8 | 25 |

### விற்பனைச் சலுகை விவரங்கள்

தி. தி. தேவஸ்தான கல்வெட்டு அறிக்கைகள், தி. தி. தேவஸ்தான கல்வெட்டுத் தொகுதி 1 மற்றும் தொகுதி 5 ஆக மூன்று நூல்களுக்கு, செட்டாக வாங்குவோர்க்கு, 12½% தள்ளுபடி வழங்கப்படும்.

'ஸ்ரீ அன்னமாச்சார்யா சங்கீர்த்தனமுலு' மற்றும் 'தாள்ளபாக்கா பணிகள்' ஆகிய 6 தொகுதிகளை (தெலுங்கு) ஒருமித்துவாங்கினால் 12½% தள்ளுபடி வழங்கப்படும்.

ரூ. 100 அல்லது அதற்கு மேற்பட்டு விளங்கும் விற்பனைக்கு 12½%, ரூ. 500/- லிருந்து ரூ. 1000/- வரை விளங்கும் விற்பனைக்கு 20%, ரூ. 1000/-க்கு மேல் இருக்கும் விற்பனைக்கு 30% என்றவாறு கமிஷன் வழங்கப்படும். ரூ. 100/-க்கு மேற்பட்டு சரக்காணைகள் விளங்கினால், அவற்றிற்கான தபால் செலவினை தி. தி. தேஸ்வதானம் ஏற்கும். மேற்படி நூல்களுக்கான தொகையினை முன்கூட்டியே செலுத்துதல் வேண்டும்.

ரூ. 100/- க்குக் குறைவான மதிப்புள்ள புத்தகங்களுக்கான தொகையுடன், அவற்றிற்காகும் தபால் செலவிற்கான தொகையினையும் சேர்த்து அனுப்புதல் வேண்டும். இல்லையெனின், புத்தகங்கள் அனுப்ப இயலாது.

சில ராகங்களையும் அதில் பிறக்கும் உணர்ச்சியையும் குறிப்பிடுகிறேன்.

கமாஸ்—சிருங்கார ராகம்

புன்னுகவராளி—இரக்கம்

மோகனம்—சந்தோஷம்

முகாரி—துக்கம்

சில ராகங்கள் ஒன்றுக்கும் மேற்பட்ட உணர்ச்சிகளைத் தோற்றுவிப்பதுண்டு.

பாடுகின்ற தொனி, உணர்ச்சி, பாட்டின் பொருள் இவைகளே உணர்ச்சிகள் தோன்றக் காரணம். ஒரே உணர்ச்சியிலேயே வேறுபட்ட நிலைகளும் உண்டு. அவைகளை பிரதிபலிக்கின்ற ராகங்களும் உண்டு.

விளக்கு வைக்கிற நேரத்தில் பூபாளம் பாடக் கூடாது. கல்யாண வீட்டில் தாலிகட்டும் நேரத்தில் முகாரி வாசிக்கக் கூடாது.

இன்னின்ன நேரத்தில், இன்னின்ன சந்தர்ப்பங்களில் இன்னின்ன ராகங்களைப் பாட வேண்டும் என்ற நியதி உண்டு.

பூபாளம், கேதாரம், தன்யாசி இவைகளை காலையில் பாடலாம்.

நண்பகல் ஸ்ரீராகம், மத்யமாவதியையும் பிற்பகலில் முகாரியும் பாடலாம். மாலைக்கு ஏற்றவை வஸந்தா, பூர்வகல்யாணி.

பல ராகங்களை ஒன்றாகப் பாடுவதற்குப் பெயர் "ராகமாலிகை".

சங்கீதத்தைப் பற்றியும் அதன் சில அடிப்படை அம்சங்களையும் எல்லோரும் அறிந்து கொள்ளுமளவிற்கு எளிமையாக கூறிவந்தேன்.

இனி, நமது தெய்வீக சங்கீதத்தை எல்லோரும் ஆராதித்து, ஒப்பற்ற சிகாமணிகளின் மலர்ப் பாதங்களைப் பணிவோம்.



# அன்னமய்ய பாடல்களில்

# அவதார ஓவியங்கள்



பாகவதத்தைத் தெலுங்கு மொழியில் வழங்கிய போதன என்னும் கவிஞர் பெருமான்,

சேதுலாரங்க சிவுநி பூஜிம்படேனி
நோரு நொவ்வங்க ஹரிகிர்த்தி
நுடவடேனி.

என்று பாடுவார். கை சோரும்வரை சிவபெருமானைப் பூசித்தல் வேண்டும். வாய் நோவும் வரை திருமால் புகழ் பேசவேண்டும்' என்பதே அதன் பொருள். இவ்வாறு பூசித்துப் புகழாப் பிறவி வீண், என்பது அந்தக் கவிஞர் பெருமாளின் கருத்தாகும். 'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்ற திருநாவுக்கரசர் கருத்தும் இதுவே. இதனாலேயே 'அச்சுவை பெறினும் வேண்டாத' ஆழ்வாராதிகளும் 'மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்' என்று மன நிறைவு கண்ட நாயன்மார்களும் தாம் பெற்ற இன்பம் இந்த வையகத்துக்கு அளிக்க திவ்விய பிரபந்தங்களையும் தேவாரங்களையும் வழங்கியுள்ளனர்.

இறைவன் புகழ்பாடும் பக்தன் உள்ளம் 'அம்மா' என்ற சொல் ஒன்றிலேயே அனைத்து இன்பங்களையும் பெறும் குழந்தை ஒன்றினைப் போல 'நாராயணா' 'நமச்சிவாய' என்ற நாம சங்கீர்த்தனதிலேயே ஈடுபட்டு இறுமாந்து மகிழும். ஆனால் அதேபக்தன் கவிஞனாகவும் அமைந்து விட்டால் பாடும் பொருள் இறை அருளாகிய ஒன்றே ஆயினும் தன் கவி மனோபாவக் கற்பனைகளுக்கு ஏற்ப எண்ணற்ற காட்சிகளில் அந்த அருள் பெருநிலையைக் கண்டு உலகுக்குக் காட்டுகின்றான். அத்தகு பக்திக் கவிஞருள் அன்னமய்ய ஒருவர்; தலைசிறந்த ஒருவர். அவர் தம் கீர்த்தனைகளில் திருவேங்கடவனைப் பல நோக்குகளில், பல தோற்றங்களில், பல உத்திகளில் படைத்துக் காட்டுகின்றார்: அவற்றுள் ஒன்றே திருமால் அவதாரங்களை அழகோவியமாக்கித் தந்துள்ள தன்மை ஆகும். அந்த அழகோவியங்கள் எல்லாம் கீர்த்தனையாக விளங்குவதும் ஒரு தனிச் சிறப்பாகும்,

தமிழில் ஆழ்வாரதியர் தசாவதாதாரங்கள் குறித்து ஆங்காங்கே மொழிந்திருப்பினும் முதன் முதல் கீர்த்தனை வடிவில் தசாவதாரங்கள் பற்றிப் பாடியருளிய பெருமை வடமொழிக் கவிஞராகிய ஜயதேவருக்கே உரியது. அவர் தம் கீத கோவிந்தத்தில் 'பிரளயபயோதி ஜலே' என்னும் கீர்த்தனத்தில் தசாவதாரங்களைப் பாடுகிறார். அமைப்பிலும் செய்யுள் நடையிலும் கீத கோவிந்தத்தை நினைவூட்டிச் செல்லும் அன்னமய்ய ஜயதேவரைப் போலத் தசாவதாரங்களையும் பாடியுள்ளார். அவற்றுள் சிலவற்றை இங்குக் காணலாகும்.

### இதோ ஒரு விந்தைக் கள்வன்!

*இராகம் : பைரவி* *11-3-10*

**பல்லவி**

வீடிவோ இதெ விந்த தொங்க
வேடி பாலு வெண்ண வெரஜின தொங்க

**சரணம்**

வெலய நீட சொப்பு வேசேடி தொங்க
தல காநநீக தாகு தொங்க
தலகக நேல தவ்வேடி தொங்க
தெலிசி சந்தெகாட திரிகேடி தொங்க
(வீடிவோ)

**சரணம் 2**

அடுகு இந்த லோகமடசேடி தொங்க
அடரி தல்லிகினென நலுகு தொங்க
அடவிலோ நெலவை யுண்ண தொங்க
தொடரி நீலி காசெதோநுண்டு
தொங்க (வீடிவோ)

**சரணம் 3**

மோச மிந்துல ஜேயுமுனிமுச்சு தொங்க
ராஸி கெக்கின குர்ரம்பு தொங்க
வேசால கிடுவச்சி வேங்கட கிரிமீத
மூசின முத்தியமை மூதமந்து தொங்க
(வீடிவோ)

இதோ இங்கே இவன் ஒரு விந்தைக் கள்வன். (என் பக்தி வலையில் அகப்பட்ட கள்வன்) காய்ச்சிய பாலும், வெண்ணையும் கவரும் திருடன். நீருள் மறைந்து வாழும் கள்வன்; தலை மறைந்து திரியும் திருடன். நிலத்தைத் தோண்டும் (கன்னக்கோல்) திருடன், மயங்கும் மாலைக் காலத்தில் திரியும் திருடன். ஓரடியில் மூவுலகையும் அடக்கிய கொள்ளைக்காரன். தாயை மருட்டிய தனயனும் கள்வன்; காட்டிலே வாழும் கள்வன், நீலப்பட்டு மார்பில் திகழும் கள்வன். கன்னியரை வஞ்சிக்கும் கள்வன். சிறந்த குதிரைத் திருடன். வேடம் பல பூண்டு இறுதியில் திருவேங்கட மலையில் மூடிய முத்தைப் போல அமைந்து விளங்கும் கள்வன்.

*டாக்டர். திரு. பொன். சௌரிராஜன்*
*டாக்டர். திரு. க. சர்வோத்தமன்*

உள்ளம் கவர் கள்வனாகிய திருமாலே இங்கு அன்னமய்யாவிடம் அகப்பட்டுக் கொண்ட திருடன்.

நிலத்தில் திரியும் திருடனையின் தேடி, ஓடிப்பிடித்து விடலாம். நீரில்

வாழும் திருடனைப் பிடிப்பது எளி தல்லவே. நீரில் குதித்தல்லவா அவனைத் தேடிப் பிடித்தல் வேண்டும். நீரில் குதித்த உடனேயே கால் ஆழ கண் சுழல அவன் அன்பு வெள்ளத் தில் ஆழத் துவங்கி விடுவோமே! இது மச்சாவதாரத்தைச் சுட்டும் தொடராகும்.

முகமூடியோடு உண்மை தெரி யாமல் மறைந்து திரிவது கள்வர் இயல்பு. ஆமையும் தன் தலையை உள்ளே இழுத்துக்கொண்டு முகங் காட்டாது வாழும் இயல்பினது. கூர்மாவதாரத்தில் திருமாலும் மந்தரமலையின்கீழ் தன்னை மறைத்துக் கொண்டனன். இந்த அழகெல்லாம் அமையுமாறு, 'தலகாந நீக தாகு தொங்க' என்று பாடுகிறார் அன்ன மய்ய.

இவ்வாறே இப்பாடலில் வராக, நரசிம்ம, வாமன முதலிய பிற அவ தாரங்களும் அழகாக எடுத்துக் கூறப் பெற்றுள்ளன.

இப்பாடலில் திருமாலைக் கள் வனுகப் புனைந்துரைத்த அன்னமய்ய பின்வரும் பாடலில் அவனைப் பூத மாகப் படைத்துக் காட்டுகின்றார்.

## புவியை அகப்படுத்திய பூதம்

*இராகம் : வராளி* 11-3-43

**பல்லவி**

புடமி நிந்தரி பட்டெ பூதமு - கடு
பொட வைன நல்லநி பூதமு (புடமி)

**சரணம் 1**

கிநிசி ஓட மிங்கெடி பூதமு
புனுக வீபு பெத்த பூதமு
கநலி கவியு சிகடி பூதமு
பொநுகு சோமபு மோமு பூதமு
(புடமி)

**சரணம் 2**

சேடகான்ள மிஞ்சின பூதமு
போடு தாரல பெத்த பூதமு
காடபு ஜடல பிங்கபு பூதமு
ஜூடரி நல்ல முசுகு பூதமு (புடமி)

**சரணம் 3**

கெலசி பித்தலே திரிகேடி பூதமு
பொலுபு தாண்ட்ல பெத்த பூதமு
பலுபு வேங்கடகிரி பை பூதமு
புலுகு மீதி மகா பூதமு (புடமி)

திருவேங்கடத்தில் நின்ற வண்ண மாய் அகில உலகையும் ஆட்கொண் டருளும் திருமாலைப் பூதமாக உரு வகித்து உருகுகிறார், இந்தக் கீர்த் தனையால் அன்னமய்ய அவர்கள்.

அகில உலகில் வாழும் அனைவரை யும் அகப்படுத்திக்கொண்டது இந்தப் பூதம். மிக நீண்டு கருத்த பூதம் இது; படகினை விழுங்கிய பூதம் இதுவே. ஓடு போன்ற வலிய முது குடைய பெரும் பூதம் இது. சீற்றங் கொண்டு பாய்ந்து பிடிக்கும் கரும் பூதம் இதுவே. அஞ்சத்தக்க முக முடைய பூதம். முறம் போன்ற பாத முடைய பூதம். போர் செய்யும் பூதம். பெருஞ்சடா முடியோடு செருக்குடைய பூதம். அச்சம் ஊட் டும், கரிய முக்காடிட்டுக் கொண் டுள்ள பூதம். அம்மணமாய்த் திரி யும் பூதம். தாவித் தாவிப் பாயும் பூதம். கருடன்மீது உலாவும் பூதம். அகண்டு விளங்கும் திருவேங்கடத் தில் நிலைத்து வாழும் பூதம்.

பூதம் பற்றியவர்கள் தப்ப இய லாது. ஆண்டவனால் பற்றப் பெற்ற அடியவர்களும் அவன் அருள் வயப் பட்டு அடிமையாகின்றனர்; மீளா அடிமையராய் அவன் வயத்தில் தம்மை மறந்து பித்தராய், பேய ராய்த் திரிகின்றனர். திருமாலின் இந்தத் திவ்விய குணம் 'பூதம்' என அன்னமய்யவால் இந்தப் பாடலில் உருவகிக்கப் பெற்றுள்ளது.

சென்ற கீர்த்தனையில் அவதாரத் தோற்றங்கள் பேசப்பெற்றன; இந் தக் கீர்த்தனையில் அவதாரக் கதை கள் குறிக்கப் பெறுகின்றன.

எவ்வுயிருள்ளும் அந்தர்யாமியாக வும் எல்லாவுயிர்களையும் தன்னுள் கொண்டு விளங்கும் விசுவரூபியாக வும் திகழும் திருமால் நிலை 'புடமி நிந்தரிபட்டெ பூதமு' என்ற தொட ரால் தெளிவாகும். சாதியால் தாழ்ந்த வேடனும் குகனையும், குணத் தால் தாழ்ந்த குரங்காம் சுக்கிரீவனை யும், இரக்கமில் அரக்கர் குலத்தில் தோன்றிய வீடணனையும் ஆட்கொண் டருளிய இராம அவதாரமும் இங்குக் கருதலாம். திருவேங்கடத்தில் திக ழும் வேங்கடவன் எல்லாவற்றையும் தன் கவர்ச்சிக்கு உட்படுத்தி ஆட் கொண்டு அருளுதலும் இந்தத்தொட ரில் அமைந்துள்ள குறிப்புப்பொருள் ஆகும்.

அடுத்து வரும் பாடல் விடுகதை பாங்கில் அமைந்து விளங்குகிறது.

## இவன் எவனோ அறியேனே

*ராகம்: ராமக்ரியா. பல்லவி* 11.3.8

எவ்வடோ காநி எரக ராது—கடு
தவ்வுலனே உண்டு தலபுலோ நுண்டு
(எவ்வடோ)

**சரணம் — 1**

எடயவு தநரெக்க லெகசி போலேடு
கடு தாகு காநி தொங்கயு காடு
வடி கிநதுபடுனு சேவகுடுனு காடு
வெடபுகோள்ளு வெஞ்சு விடுடுனு காடு
(எவ்வடோ)

**சரணம் — 2**

மிகுல பொட்டி வாடு மிண்ட்டிகினி
பொடவு
ஜகடாலு தபசி வேஷ முநுலுநு
மகுவகை போராடு மரிவிரக் துண்டுநு
தகுகாப்பு பநுலு நெந்தயு
தெல்லதநமு
(எவ்வடோ)

**சரணம் — 3**

தருனுல வலபிஞ்சு தகிலி பைகொ நடு
துரகமு தோலு ரவுதுனு காடு
திருவேங்கடாத்ரிபை திருகுநெப்புடுநு
பரமமூர்த்தியை பரகு நீ கநுடு
(எவ்வடோ)

"அவன் யாரோ தெரியாது. ஆனால் அவன் அருகிலேயே இருக்கிறான். என்னுடைய கருத்துகளில் நிலைத்து வாழ்கிறான். அவனுக்குச் சிறகு போன்ற செதிள்கள் உள்ளன. ஆனால் அவன் ஆகாயத்தில் பறக்கமுடியாது. அவன் பதுங்கும் பழக்கம் உள்ளவன். ஆனால் அவன் கள்ளன் அல்லன். அவன் நகங்களை வளர்ப்பவன்தான் ஆனால் பரதன் அல்லன். அவன் குள்ளன்தான். ஆனால் ஆகாயத்தை விட உயர்ந்தவன். அவன் சண்டை பிடிப்பவன் தான். ஆனால் அதே வேளையில் முனிவர்களைப் போல் வேடம் போடக் கூடியவன். பெண் களுக்காகப்போர்செய்பவன். ஆனால் எல்லாம் துறந்தவன்போல காட்சி அளிப்பவன். தன் செயல்களை ஓர் உள் நோக்கத்துடன் செய்பவன். பெண்களைத் தன்பால் இழுக்கக்கூடிய வன். ஆனால் அவர்களுடைய மோகத் திற்கு ஆளாகாதவன். குதிரைகளை நடத்தவல்லவன். ஆனால் மாவுத்தன் அல்லன். அவன் யார் தெரியுமா?

திருவேங்கடாசலத்தின் மேல் திரியும் பெருமாள்'' (11-8)

கண் முன்னே வாழும் மக்கள் பேசும் வாய்மொழிச் சொற்களை அப்படியே ஆங்காங்கே எடுத்து ஆள்வது அன்னமய்யாவின் தனிச்சிறப்பாக மொழியியலார் பாராட்டுவர். அப்படியே பாமரமக்களிடம் பழகும் இலக்கிய வடிவுகளுள் ஒன்றாகிய விடுகதைப் போக்கில் இந்தப் பாடல் அமைந்திருந்தாலும் ஒரு தனிச் சிறப்பாகும். பகவத் விஷயத்தைப் பாமரரும் பெற்றுத் துய்த்தல் வேண்டும் என்ற பரந்த உருக்கமே இத்தகு உத்திகளைக் கையாளுமாறு அன்னமய்யாவைத் தூண்டியது எனலாம்.

அவனுக்குச் சிறகு போன்ற செதிள்கள் என்று குறிப்பிட்டது மச்சாவதாரத்தை; பதுங்கும் பழக்கம் என்றது கூர்மாவதாரத்தை; தாழ்ந்திருப்பவன் என்பது வராக அததாரத்தை; நகங்களை வளர்ப்பவன் என்பது நரநரசிம்மாவதாரத்தை; குள்ளன்தான் என்பது வாமனவதாரத்தை; ஆகாயத்தைவிட உயர்ந்தவன் என்பது திருவிக்கிராமவாதாரத்தை; சண்டைபிடிப்பவன் என்பது பரசுராமன் அவதாரத்தை; பெண்களுக்காகப் போர் செய்பவன் என்பது கிருஷ்ணவதாரத்தை; பெண்களைத் தன்பால் இழுக்கக்கூடியவன்; ஆனால் போகத்திற்கு ஆளாகதவன் என்பது இராமாவதாரத்தை; குதிரைகளை நடத்த வல்லவன் என்பது கல்கி அவதாரத்தைக் குறிப்பனவாகும்.

இலக்கியக் கலை தோற்றத்திற்கு ஒத்துணரும் உருக்கமே காரணம் என்பர் ஒரு நெறியார். அன்று, இன்ப உணர்வே அடிப்படை என்பர் வேறு சிலர். எது எப்படியாயினும் இருநெறியும் இலங்குகின்றன அன்னமய்யா பாடல்களில். முன் வந்த பாடல் உள்ளத்து உருக்கம் பற்றியது எனக்கண்டோம். இங்கே இப்போது வரும் பாடல் இன்ப உணர்வைக் கொண்டு விளங்குகிறது.

### இத்தனைத் திருவிளையாடல்களும் இதற்கோ

இராகம்: பூபாளம் 12-282

பல்லவி

இந்நி சேதலுநு சேசெ நிந்து கொரகே
—வீடு

கண்ணுலநெ பொத்து புச்சி கதவே நீ
கொரகே (இந்நி சேதலு)

சரணம்-1

மீநமாய செமடல மேது முந்த கொரகே
தாநே கூடமு நாய தாத கொரகே
ஆதிகோதி கிடியாய நதலிஞ்சு
கொரகே
மாநடு கர்பமுசாடு மாருமோமு கொரகே
(இந்நி சேதலு)

சரணம்-2

காலு சாசெ நேலயீது கமதிஞ்சு
கொரகே
ஜாலி பெட்டே சேதலநே சம்ப்பு கொரகே
ஏலிகாய விரஹுல நேபடி கொரகே
சைலமெத்தெ நீதுசமு லெத்தே
கொரகே (இந்நி சேதலு)

இத்தனைத் திருவிளையாடல்களும் இதற்கே? இவன் கண்ணைக் காட்டியே காலம் கழிப்பவன். வியர்க்கும் மேனியைக் குளிர்விக்கவே மச்சம் ஆனான். பதுங்குவதற்காகவேதான் ஆமை ஆனான். பிறரை மிரட்டுவதற்காகவேதான் வராகம் ஆனான். முகங்காட்ட அஞ்சியே தூணைவிட்டு வருவதே இல்லை. அனைவரும் காண வேண்டும் என்று கருதியே காலைத் தூக்கினான் (தாபத்தால்) கொல்வதற்காகவே இரக்கமுள்ள மொழி பேசினான். தாபத்தால் தவிக்கும் மகளிர் மேலும் வருந்தவே தான் தலைவன் ஆனான். கோவர்த்தன மலையைக் கையால் எடுத்தது மங்கையர் கொங்கைகளைப் பிடிப்பதற்கே. உள்ளதெல்லாம் உனக்காகவே துறந்தான். உன்னோடு புணர்வதற்கே மோகினியானான். உன் மீது உள்ள காதலாலேயே திருவேங்கடவன் இங்கு வந்து நிற்கிறான்.

இந்தப் பாடலில் இரு நெறிகள் புலப்படுகின்றன. ஒன்று பக்தைகளின் வயப்பட்டு அவன் வாடிய காதல் தாபங்கள் அவதார முறையில் காட்டப்பெறுகின்றன.

இன்னொன்று தன்னைக் காதலிக்கும் பக்தர்களுக்கு உரியவனாத் திருமால் எடுத்த அவதாரங்கள் குறிக்கப்பெறுகின்றன.

கண்ணைக் காட்டி காலங்கழித்தலும் விரக தாபத்தால் வியர்க்கும் மேனியை மச்சாவதாரம் எடுத்து நீருள் கிடத்திக் குளிர்வித்தல் முதலியனவும் மின்வகையைச் சார்ந்தது.

பக்தனுக்காகத்தான் மோகினி ஆனதும், அவனைக் கண்டு ஆட்கொள்ள மண்ணுலகில் திருவேங்கடத் திருமலைக்கு வந்து நின்றதும் பின் நெறியைச் சாரும்.

இந்தப் பாடல் திருவேங்கடத்தல வரலாற்றையும் உட்கொண்டது ஆகும். பிருகு முனிவர் திருமாலுக்கு இழைத்த இழிவைச் சகிக்க மாட்டாமல் திருமகள் பிரிந்து வருந்தியபோது தோழி ஒருத்தி 'இறைவன் எடுத்த அவதாரம் அனைத்தும் திருமகளாகிய உனக்காகவே' என்று கூறுகின்ற போக்கில் இது அமைந்துள்ளது.

இவ்வாறு பத்து அவதாரங்களைப் பாராட்டும் பான்மையில் திருமாலைக் கள்வனாகவும், பூதமாகவும் படைத்துக்காட்டியும், விடுகதை முதலிய இலக்கிய உத்திகளைக் கையாண்டும், உருக்கம், இன்பம் முதலிய தலையாய சுவைகளைப் பயன்படுத்தியும் அன்னமய்ய பாடும் பாங்கு போற்றற்கு உரியது.

## எழுதுங்களேன்!

இந்திய கலாச்சாரத்தின் உயிர் ஊற்றுக் கண்களாக இருந்து வருவன இந்தியாவின் பன்னிரண்டு ஜீவ நதிகளாகும். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை ஒவ்வொரு நதிக்குரிய 'புஷ்கராலு' எனப்படும் புனல் விழா கொண்டாடப்பட்டு அவ்வவ் நதிக்கரையில் உள்ள கோயில்களின் பெருமை பேசப்படும். இவ்வகையில் ஜீவ நதிகளில் ஒன்றான காவிரியின் புனல் விழா, 27-10-1981 அன்று கொண்டாடப்படும். ஆகவே பெருமையும் தனித்தன்மையும் கொண்டு, இந்திய சரித்திரத்தில் பெரும் பங்கு வகித்த காவிரியின் சிறப்பினையும், அந்நதிக்கரையில் இருந்துவரும் புனிதத் தலங்களின் சிறப்பையும், தனித்தன்மையினையும் 'ஸப்தகிரி'யில் இரண்டு பக்கங்களுக்கு மிகாமல் வரக்கூடிய கட்டுரைகளை 31-5-81க்குள் எங்களுக்கு அனுப்புங்கள், பிரசுரிக்கப்படும் கட்டுரைகளுக்குத் தகுந்த சன்மானமும் வழங்கப்படும்.

(ஆ-ர்.)



# நான் - மனம்



மனித இனம் இன்பத்தையே நாடுகிறது. துன்பத்தினைத் தவிர்த்து இன்பம் துய்க்க அது விரைந்து பயணம் செய்கிறது. துன்பமே இல்லாத அந்த இன்பம் எங்குக் கிடைக்கும் என்று கேட்டு, தவித்துக் கொண்டிருக்கிறது. அத்தகைய தன்மையுடைய இன்பம் எதன்மூலம் கிடைக்கும் என்பது மனித இனித்தின் பரம்பரை தொட்டு வழங்கி வரும் கேள்வியாகும். அப்படிப்பட்ட இன்பத்தை-அதாவது துன்பத்தின் நிழல் கூட படியாத, படிய முடியாத பேரானந்தத்தை—வழங்க வல்லது எது? என்ற வினவிற்கு நம்முடைய பண்டைய புராணங்களும் வேதங்களும் விடை பகர்கின்றன.

துன்பமில்லாத இன்ப வாழ்வுக்கு அடிப்படையான மன உறுதியைப் பெறும் பொருட்டாகவும், கிடைத்த இன்ப வாழ்வை நிலைநிறுத்திக் கொள்ளச் செய்யும் வல்லமை உடையதுமானஇறைசக்தியை நாம்கெட்டியாகப் பிடித்துக் கொள்ளலே, அந்த இன்ப வாழ்வுக்கு நாம் விதைக்கும் முதல் விதையாகும்.

மனம் என்ற பொருளிலிருந்தே அனைத்தும் பிறக்கின்றன. அப்படியாகில் அந்த மனம் எங்கே இருக்கிறது? அது எந்த வகையில் செயல் புரிந்து கொண்டிருக்கிறது. ஆழ்ந்த உறக்கத்திலிருந்தவன், நேற்று அருமையான தூக்கம் என்று கூறிப்பெருமைப் பட்டு கொள்கிறான். அப்படியானால், அந்தத் தூக்கத்தின் தன்மையினை, பொறிகளனைத்தும் செயலற்ற அந்த வேளையில் அறிந்து சொல்லும் தன்மை படைத்ததாக விளங்குவது எது? அதுவே மனம்.

மனம் சர்வ சக்தி பெற்றது. அந்த மனத்திலிருந்து எழும் ''நான்'' என்ற சொல் அனைத்து ஜீவராசிகளுக்கும் பொதுவான 'நான்' என்ற சொல் ஒரு தனித்துவ மகிமை பொருந்தியது. 'நான்' என்பது இந்த உடலையா அல்லது உயிரையா என்ற இந்தக் கேள்வியை உள் மனதுடன் போராடி விவாதம் செய்யும் வேளையில் இயற்கையின் பரிபூரணமான ஜீவ ஓட்டம் அறிய வருகிறது. என்னுடைய, எனக்காக, என் என்றவாறு 'நான்'என்ற சொல் மாறிப் பொருள் தருகிறது. ஆனால் அதை ''நானுடைய'', 'நானுக்காக' ''நானின்'' என்ற பொருள்பட வழக்கில் வருவதில்லை.

*திரு. எ. சுப்ரமணியன் - திண்டுக்கல்.*

அவன் என்ற சொல் நேரிடையான பொருள் நோக்குடன் 'அவனது' ''அவனுடைய'', ''அவனுக்காக'', ''அவனின்'' என்றவாறு வழக்கம் பெறுகிறது.

இத்தனை மாறுன தன்மையுடைய இந்த ''நான்'' என்பது எது? இன்ப, துன்பங்களுக்கு இடையில் இருந்து 'மனம்-உடல்' இரண்டையும் வினைகளுக்கு உட்படுத்தி, தான் ஒரு கிரியா ஊக்கியாக இருந்து வினைகளை, வினைகளின் தன்மைகளுக்கேற்ப நடத்தி, பிரதி பலன்களை ஏற்படுத்தும் சிறப்பு வாய்ந்த ''நான்'' என்பது இயற்கையின் பரிபூரணமான அம்சம். இதைத்தான் ''தெய்வம்'' என்று நாம் கொண்டாடுகிறோம்.

இயக்கத்தின் மூலாதாரமாக இருந்து இயங்கி வரும் இந்த 'நான்' என்பது ஒடுங்கும் போது வெளியேகி ஆத்மஜோதியைத் தோற்றுவித்து, அதன்மூலம் பேரானந்தத்தை அனுபவிக்கிறது.

இந்நிலையின் மனம் சஞ்சலமற்ற நிலையில், இறையுடன் ஒன்றி, இறை அநுபூதியில் கலந்து திளைக்கிறது. எனவே மனம் வலிமை பெற இறையினிடம் நாம், நம்மை முழுமையாக அர்ப்பணம் செய்து கொண்டு, இறையின்பத்தை அனுபவித்து வாழ்பவர்களாக ஆவோமாக!



சென்னைக்கு அடுத்த பல்லாவரத்திலிருந்து 3 மைல் தொலைவில் உள்ள அழகான திவ்ய தேசம் ''திருநீர்மலை'', தலபுராணத்தில் ''தோயாத்ரீ க்ஷேத்ரம்'' என்று வழங்கப்படுகிறது. மலையடி வாரத்திலுள்ள கோயிலில் நீர் வண்ணன் என்ற பெயரில் ஸ்ரீ ராமனும், மலை மீதுள்ள கோயிலில் சயனக் கோலத்தில் ரங்கநாதனும், அமர்ந்த கோலத்தில் நரஸிம்மனும், நின்ற கோலத்தில் திரிவிக்ரமனும் காட்சி தருகின்றனர்.

''அணி திகழும் சோலை அணி நீர் மலையே'' என்று பூதத்தாழ்வாரும், ''நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தார்க்கு இடம் மாமலையாவது நீர்மலையே'' என்று கலியனும் மங்களா சாஸனம் செய்துள்ளனர்.

தகவல் : திரு. எஸ். வி. வைத்தியநாதன் - சென்னை-28.

# இந்திய மருத்துவம்

டாக்டர். எஸ். ஜெயராமன்,
R.M.P., M.I.H., L.I.M.,
திருப்பதி.

நமக்குத் தெரிந்த, பழக்கத்தில் உள்ள நன்மை தரக்கூடிய சில மூலி கைகளைப்பற்றி சற்று ஆராய்வோம். அவற்றுள் முதலில் வேரின் வகைகளைப்பற்றி கூறுவதிலிருந்து ஆரம்பிக்கிறேன்.

## வேரின் வகைகள்

வில்வ மரத்தின் வேரினால் வாத குன்மம், கபாதிக்கம், பித்தசோகை, கபத்தால் வந்த தாகம், சந்நிபாதம், தேகக் கடுப்பு, ருசியற்ற தன்மை, உஷ்ண பேதி, விக்கல் முதலிய ரோகங்கள் நீங்கும். அழகும், தேக புஷ்டியும் உண்டாகும்.

மா மரத்தின் வேர்ப்பட்டையால் சீத ரத்தபேதி, வயிற்றுக் கடுப்பு, வாந்தி இவைகள் நீங்கும்.

மருதோன்றி மரத்தின் வேரால் ருது காலதோஷங்கள், பித்த நோய்கள் தீரும்.

விஷ முஷ்டி என்கிற வெட்டி மரம் மகா விஷத் தன்மையுடையது. இதன் வேரால் மகா சர்ப்ப விஷங்களும், பயித்திய குணங்களும் நீங்கும்.

புங்க மர வேரினால் வாத குடைச்சல், திரி தோஷ மூர்ச்சை, வாயு குன்மம், ரத்த தாதுவினால் ஏற்படும் ரோகங்கள், இரணம், புரையோடல், விஷம் இவை போகும்.

நாவல் மரத்தின் வேரினால் வாத விகாரம், புண், வெகு மூத்திரம், ரத்த சீதபேதி, வாத சுரம் இவை விலகும்.

நல்ல அகத்தி வேரால் வெள்ளை, அதிதாகம், உடல் உள்ளங்கை, ஆண் குறி நாளம் இவற்றில் ஏற்படும் எரிச்சல் நீங்கும்.

நெல்லி வேரால் வாந்தி, அருசி, திரிதோஷம், பத்தியத் தவறினால் பிறந்த தோஷங்கள், அதனால் ஏற்பட்ட சன்னி இவை தீரும். திரிதோஷ சமனமும், மலப்போக்கும் ஏற்படும்.

அருநெல்லி வேரினால் தனிச் சுரம், அரோசிகம், திரிதோஷம். வாந்தி இவைகள் போகும்.

## செடியின் வேர் வகை

ஆடாதோடை வேரினால் இருமல், அக்னி மந்தம், பித்தம், மகா சுவாசம் முதலியன நீங்கும்.

சங்கம் வேர்ப்பட்டை கோழை, காசம், கபச் சுரம், வாதக் கடுப்பு, சிலேத்தும சோகை, உட்சுரம், தனியாத கோபம், கிருமி ரோகம் ஆகியவை போகும்.

அவுரி வேரினால் சர்வ விஷம், மூர்ச்சை, வெள்ளை, வயிற்று வலி ஆகியவை போகும்.

வெட்டி வேரினால் பித்தத்தால் உண்டாகும் தாகம், காமாலை, பித்தம், குஷ்டம், தலை நோய், கழுத்து நோய், சுக்கில நஷ்டம், உன் மத்தம், தீப் புண், வோதம், பித்தம், சலேத்துமம் திரிதோஷ மூர்ச்சை நேத்திர ரோகம் இவை நீங்கும்.

## கொடியின் வேர் வகை

சிறு குறிஞ்சா வேரானது நஞ்சு வாத சுரம், வாத தோஷம், காசம், சுவாசம் இவைகளைப் போக்கும்.

பேய்ச் சுரை வேரினால் மஹா விஷம், கோழை காசம் இவை நீங்கும்.

முசு முசுக்கை வேரினால் துர் நாற்றத்துடன் இறுகிய கோழை, மார்பு நோய், குன்மம், பித்தாதிக்கம், இவை போகும். குரங்குக்கு கூட முசு முசு என்று ஒரு பெயர் உண்டாம்.

வெண் காக்கட்டான் வேருக்கு வெள்ளை, பிரமேகம், தலை நோய், சுரம், கண்ணோய் இவைகளை நீக்கும் சக்தி உண்டு.

கருங் காக்கட்டான் வேரினால் மாந்தம், மலகிருமி, வாதாதிக்கம், சிலேத்துமரோகம், மலக்கட்டு ஆகியவை நீங்கும்.

பெரு மருந்தின் வேர் பித்த கோபம், சுவாசம், இருமல், சுர வேகம், சரீரக்குத்தல், வாத தோஷம், அற்ப விஷக்கடிகள் ஆகியவைகளைக் குறைக்கும்.

சிவந்த நீர்ப்பசையுள்ள திப்பிலி வேர் தாகம், ஆயாசம், மேகம், பித்தாதிக்கம் இவற்றை நீக்கும். சுக்கிலத்தையும் அழகையும் விருத்தி செய்யும்.

நன்னாரி வேரை அரைத்து, தேனில் பாகஞ் செய்து உண்ணில் அதிபித்தம் தீரும். அதை கற்றாழைச் சோற்றோடு உண்டால் வண்டு கடி போகும். இன்னும் முறைப்படி உபயோகிக்க நீரேற்றம், பித்த நோய், தாகம், வாயில் நீர் ஊரல், புணர்ச்சியின் சூடும், கிரத்தியின் சுர வேகமும் போகும்.

## மரத்தின் பட்டை வகை

அத்தி மரப் பட்டையால் உதிரப் போக்கு, சீத ரத்தபேதி, புண் ஆகியவை போகும்.

நாவல் மரப் பட்டையினால் வாயில் தோன்றும் நோய்கள், இருமல், பெரும்பாடு, ஈளை, மச்ச பேதங்கள் ஆகியவை நீங்கும்.

முருங்கையின் வேர்ப்பட்டைக்கு கபதோஷம், சந்நி பாதம், சுரமும், வாத தோஷமும் நீங்கும்.

புளிய மரப் பட்டையினால் குன்ம நோய், சுரம், அசீரணம், இவை

நீங்கும். பித்தமும், பசியும் விருத்தியாகும்.

பெரு மரப் பட்டையின் குணத்தால் அதிசாரம், கிராணி, உதிர நோய், வாதாதிக்கம் இவைகள் நீங்கும்.

கரு வேலம் பட்டையினால் சுரமும், பித்த நோயும் ஒழியும், பல்லிறுகும்.

எருக்கம் பட்டையால் சந்நி பாதம் வாத நோய், பல விஷம் போகும்.

கள்ளி மரப் பட்டையினுல் கப வாதமும், நொச்சி மரப் பட்டையினுல் சந்நி பாதத்தால் பிறந்த வாதமும் போகும்.

## மரவகை (கட்டை)

நல்ல சந்தன மரக்கட்டையை முறைப்படி அனுபவிப்பவர்கட்கு, நல்ல விவேகமும், மன மகிழ்ச்சியும், சருமதாது ஒளியும், மாதரிச்சையும் உண்டாகும். சீழ் பிரமேகம் நீங்கும்.

தேவதாருக் கட்டையினுல், நாசி ரோகமும், பழய சுரமும், சகல தோஷமும், சரீர வெப்பமும் நீங்கும்.

சரக்கொன்றை மரத்தால், பெரு வியாதி, கிருமி ரோகம், சூலை, வாத கபம், விஷமலம், அரோசகம் இவை போகும். இதில் துவர்ப்பு அதிகமாதலால் விரோசனம் ஆகும்.

மருத மரமானது வெகு மூத்திரம், பிரமியம், மயக்கம் தாகம், நீங்காத சுரத்தில் வரும் ஆயாசம், பெரு வியாதி, கிருமி ரோகம், உதர நோய் இவைகளைப் போக்கும்.

உஷ்ணமுள்ள இலவ மரத்தினுல் வாதம், மூத்திர எரிச்சல், தந்த ரோகம் இவை போகும், சுக்கிலமும், தாதுவும் பலப்படும்.

விளா மரத்தினுல் இருமல், இரைப்பு, சொல்ல முடியாத தாகம், பித்த கபரோகம் இவை நீங்கும்.

வேப்ப மரத்திற்கு சுரம், வாத கோபம், எரி கிருமி, வயிற்று நோய், சிதறுகின்ற மலப்பேதி இவை போம்.

## இலை வகை

புளியமரத்தின் இலையினுல் அளிந்த இரணம், சோகை, பாண்டு ரோகம், சிவந்த கண் நோவு இவை நீங்கும்.

வேப்பிலையினுல் புழுக்கல், பெரு வியாதி, மாந்தம், மகா விஷம், அம்மைக் கொப்புள இரணம் இவைகள் போகும்.

அகத்தி இலையை உணவில் இடு மருந்தும், பயித்திய தோஷமும் நீங்கும். கடுவானும், வாய்வு முண்டாகும், போஜனம் ஜீரணமாகும்.

கரு வேப்பிலையை உண்பதனுல், அரோசகம் (அஜீரண பேதி) சீதபேதியால் வரும் வயிற்றுளைவு, பழைய ஜுரம், பயித்திய தோஷம் (பித்தம்) போகும். தலை முடிக்கு பலம்.

தென்னங் குருத்தால் கபவுபத்திரவமும், ரத்த மூலமும் நீங்கும். பனங் குருத்தை தின்பதால் ரத்த மூலமும், அதிசாரமும் உண்டாகும்.

மூங்கில் இலையால் குடற்சூலையும், வயிற்று நோவும், ரத்தத் தடிப்பும், பிரசவ காலத்தில் தங்கிய அழுக்கும் நீங்கும்.

ஆடா தோடையிலையினுல் வாத தோஷம், பற்பல சுரம், சந்நி பாதம், வயிற்று நோய், கபாதிக்கம் (சளித் தொல்லை) இவை நீங்கும்.

வெண் நொச்சில் இலையால் மகா வாதம், பீநசம் சுரம், இருமல், நீரேற்றமும்; கரு நொச்சில் இலையால் வாத வலி, நாசி ரோகம், கபம், மண்டைக் குத்தல், குடைச்சல் இவைகள் நீங்கும்.

எருக்கிலையால் எலி விஷம், பெரு நோய், கீல் வீக்கம் வலி-வாய்வு, சர்ப விஷம், மலக் கட்டு ஆகியவை நீங்கும்.

முருங்கை இலையினுல் அக்னிமந்தம், உட் சூடு, பித்த மூர்ச்சை, கண்ணோவு ஆகியவை நீங்கும்.

காட்டாமணக்கு இலையினுல் மேகக் கட்டி, புண், சரப்பான், குன்மக் கட்டி, சிலேத்தும, வாதக் குத்தல், பெரு விரணம், வருத்தா நின்ற உள் மூலம், வெள்ளை இவைகளைப் போக்கும். சுக்கில விருத்தியுண்டாகும்.

பெரியா நங்கை இலைக்கு பித்த ரோகங்களும், மல பந்தமும் நீங்கும், இது பலவித பஸ்மங்கள் செய்வதற்கு உதவும்.

சிரியா நங்கை என்னும் மூலிகை ஸ்திரி வசியத்தைச் செய்யும். வெங்காரத்தை பஸ்மமாக்கும். தேகத்தில் வனப்பை உண்டாக்கும். கொடிய சர்ப விஷத்தையும் போக்கும். ஆயின் இப்பெரியா நங்கையும், சிரியா நங்கையும் கிடைப்பதரிது.

பருத்தியின் இலையையாவது, மொக்கையாவது பலம் அரைத்து அரை ஆழாக்கு பசும் பாலில் கரைத்துக் குடித்தால் சீழ் ரோகமும், ரத்த பித்த ரோகமும் நீங்கும்.

அரிவாள் மூக்கு பச்சிலையால் ஆயுதங்களால் உண்டாகின்ற வெட்டுக் காயத்தை சீக்கிரத்தில் ஆற்றுதவும் தவிர, மகா விஷத்தையும், உதிரக் கெடுதியால் பிரந்த சிரஸ் தாப ரோகத்தையும் நீக்கும்.

துத்தியிலையை ஆமணக்கு நெய்யால் வதக்கி கட்ட மூல ரோகமும், கட்டி, இரண முளைகளும் போகும். அதை பாகஞ் செய்துண்ணில் சகல ரோகங்களும் போகும்.

அவுரியிலை வாத ஜுரம், மாந்தம், சீதளம், சந்நி பாதம், கீல் வாதம், இவைகளை நீக்கும். உடலுக்குப் பொன்னிறம் தரும்.

குப்பை மேனி இலையால் தந்த மூல நோய், தீச்சுட்ட புண், வயிற்று வலி, வாத ரோகம், ரத்த மூலம்-நமைச்சல்-குத்தல், இரைப்பு, பீநசம், கபாதிக்கம் இவை நீங்கும்.

தும்பையிலையால் சர்ப விஷங்கள், வாத நோய், தலைவலி, கப தோஷம், சிலேஷ்ம ஜன்னி இவை நீங்கும். இதை புளியிட்டு கடைந்து உணவோடு உண்டால் பிரமேகம், நேத்திரப் புகை, கால்களில் அசதி, தாகம், சோம்பல் இவை உண்டாகும்.

(தொடரும்)

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

பரசுராமர் விட்ட அம்பு கார்த்த வீரியன் தலையினைக் கொய்தது.

அரசாட்சியில் இருந்த காரணத்தால் ஆணவம் கொண்டு அடாது செய்தான் அரசன். முறை தவறிய அவன் செயலே அவன் அழிவுக்குக் காரணமாயிற்று.

கார்த்தவீரியன் மாண்டு போனதையறிந்தனர் அவன் மைந்தர் சிலர். எஞ்சியிருந்த அவர்களும் அஞ்சியோடி ஒளிந்துக் கொண்டனர்.

காமதேனுவை மீட்டு வந்து தன் தந்தையின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார் பரசுராமர். நிகழ்ந்ததையெல்லாம் ஒன்று விடாமல் தன் தந்தையிடம் கூறினார். ஜமதக்னி முனிவர் தன் மைந்தன் கூறியவற்றைக் கேட்டுச் சிந்தை தளர்ந்தார்.

"என் அன்புக்குரிய மைந்தா! நீ என்ன காரியம் செய்துவிட்டாய்! நாம் பிறந்தது அந்தணர் குலத்தில் அல்லவா? அந்தணர் என்போர் அறவழியிலன்றோ ஒழுக வேண்டும். மறவழி நமக்கு உரியதல்லவே! எல்லாவுயிர்களிடத்தும் அன்பு காட்டுவதன்றோ அந்தணரின் இலக்கணம். செந்தன்மை பூண்டு ஒழுக வேண்டிய நீயோ சிந்தையில் சினத்தைத் தேக்கினாய். வில்லையும் அம்பையும் தாங்கி வேந்தனை வீழ்த்தினாய்! மன்னனைக் கொன்ற பாவம் நீங்கப் புண்ணிய நதிகளில் நீராடி வா! தீர்த்த யாத்திரை செய்து உன் கொலைப் பாவத்தைக் கழுவிக்கொள்!"

தந்தையின் அறிவுரையைப் பரசுராமர் தன் சிந்தையில் தேக்கினார். தந்தையின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி விடை பெற்றார். பின், கங்கை முதலான புண்ணியத்துறைகளில் நீராடினார். இவ்வாறு ஆண்டு ஒன்று கழிந்தது. மீண்டும் தந்தையின் இருப்பிடத்தை வந்தடைந்தார்.

ஜமதக்னிமுனிவர் ஒருநாள் ஹோமம் முதலான அக்கினி காரியங்களைச் செய்ய விரும்பினார். எனவே, தூய நீராகிய கங்கை நீரைக் கொணருமாறு ரேணுகைக்குக் கட்டளையிட்டார். ரேணுகை குடம் தாங்கிக் கங்கைக் கரை சார்ந்தாள். அங்கே சித்திரரதன் என்னும் கந்தருவன் ஒருவன் தன் மனைவியரோடு கங்கையில் இறங்கி நீர்விளையாட்டில் மூழ்கியிருந்தான். அதைக் கண்ணுற்ற ரேணுகை தன் வசமிழந்தாள். எனவே, தான் வந்த வேலையை மறந்தாள். சற்றுநேரம் கழிந்து, ரேணுகை தன் செயலுக்கு அஞ்சினாள். முனிவர் கோபித்துக் கொள்வாரேயென்ற பயத்தினால் விரைந்து சென்றாள். காலம் தாழ்ந்தி ரேணுகை வந்ததற்கான காரணத்தை முனிவர் ஞானப்பார்வையால்அறிந்து கொண்டார். கடமை தவறிய ரேணுகையைக் கொல்லுமாறு தம் மைந்தர்களைக் கேட்டுக் கொண்டார். பெற்றெடுத்துப் பேணி வளர்த்த தாயைக் கொல்ல எந்த மைந்தனுக்குத்தான் மனம் வரும்?

எனவே, தாயைக் கொல்ல ஜமதக்னியின் மைந்தர்கள் மறுத்து விட்டனர். முடிவில், ஜமதக்னி பரசுராமரை நோக்கிக் கூறலுற்றார்:

"பரசுராமா! உன் உடன்பிறந்தோர் அனைவரும் என் கட்டளையை நிறைவேற்ற மறுக்கின்றனர். கடமையிலிருந்து நழுவியவள் உன்தாய்; என் காரியம் அவளால் தடைப்பட்டது. எனவே குற்றமிழைத்த உன் தாயைப் பெற்றெடுத்தவள் என்று பாராமல் வெட்டிச்சாய்த்து விட்டு வா!"

"தந்தையே! தந்தை சொல்மிக்க மந்திரமில்லை!" என்பதை நன்றாக உணர்ந்தவன் நான். எனவே, தங்கள் கட்டளையைத் தவறாமல் நிறைவேற்றுவேன். என்னை ஆசீர்வதியுங்கள்" இவ்வாறு கூறிவிட்டுப் புறப்பட்டுச் சென்றார் பரசுராமர்.

தந்தையின் கட்டளையை நிறைவேற்றி விட்டு, மீண்டும் வந்து தன் தந்தையின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி எழுந்தார் பரசுராமர்.

"மைந்தா! உன் உடன் பிறந்தோர் என் சொல்லைத் தட்டிக் கழித்தனர். நீயோ, என் வேண்டுகோளை நிறைவேற்றி விட்டு வந்திருக்கிறாய். நீ விரும்பும் வரங்களைக் கேள். தருகிறேன்!" என்று அன்பொழுகக் கூறினார் ஜமதக்னி.

"தந்தையே! எனையீன்ற தாயும் என் உடன் பிறந்தோரும் மீண்டும் உயிர் பெற்று எழவேண்டும். இறந்தோம்! என்ற எண்ணமே ஏற்படாத மனநிலையினை அவர்கள் பெறுதல் வேண்டும்! இதுவே நான் தங்களிடம் வேண்டும் வரம்."

புதல்வனின் மதிநலம் கண்டு பூரித்தார். தந்தை 'அப்படியே ஆகட்டும்!' என்று அருள் புரிந்தார். மாண்டவர்கள் உயிர் பெற்றெழுந்தனர். உயிர்த்தெழுந்த தாயின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார் பரசுராமர்.

நாட்கள் சில சென்றன.

ஒருசமயம், ஜமதக்னி முனிவர் ஹோமசாலையில் அமர்ந்திருந்தார். அப்போது, கார்த்த வீரியனின் மைந்தர் சிலர் முனிவரைக்கொல்வதற்காக ஹோம சாலைக்குள்ளே நுழைய முயன்றனர். ரேணுகை எவ்வளவோ தடுத்துப் பார்த்தும் பயனில்லை. உள்ளே நுழைந்தவர்கள் தங்கள் எண்ணத்தைச் செயலாக்கி மீண்டு விட்டனர். தன் கண் எதிரிலேயே தன் கணவர் கொலை செய்யப்பட்டதைக் கண்டு இருபத்தோரு முறை ரேணுகை துக்கம் தாளாது தன் வயிற்றில் அடித்துக் கொண்டாள்.

வெளியில் சென்றிருந்த பரசுராமர் இதுபோது ஹோம சாலையை வந்தடைந்தார். நிகழ்ந்ததை அறிந்தார். அவர் நெஞ்சிலிருந்தும் அனல் பறந்தது. தன் தாய் இருபத்தோரு முறை வயிற்றலடித்துக் கொண்டு அழுத செய்தியினைக் கேட்டுக்கொதித்தார்.

"என் தந்தையைக் கொன்றவர்கள் க்ஷத்திரியர்கள். என் தாய் துக்கம் தாளாது இருபத்தோருமுறை தன் வயிற்றில் அடித்துக் கொண்டு அழுதாள். எனவே, இருபத்தோரு தலைமுறையில் தோன்றும் க்ஷத்திரிய மரபினரைக் கொன்று ஒழிப்பேன்! இது சத்தியம்!'' என்று பயங்கரமாகச் சபதம் செய்தார் பரசுராமர். அவ்வாறே தன் பரசுப்படையால் இருபத்தொரு தலைமுறை மன்னர் மரபினரைக் கொன்றொழித்தார்.

பின்னர், பரசுராமரின் சினம் ஒருவாறு தணிந்தது. கடுந்தவம் இயற்றக் கருத்துக் கொண்டார். எனவே இந்தக் காசினியைக் காசிபர் முதலிய முனிவர்க்குப் பகிர்ந்து கொடுத்து காத்து வருமாறு வேண்டிக் கொண்டார். மன அமைதி வேண்டி மகேந்திர மலையைச் சென்றடைந்தார். அங்கே அமைதியுடன் வாழ்ந்து வரலானார்.

திருமாலின் பரசுராம அவதாரத்தின் நோக்கம் இவ்வாறு ஒருவகையாக நிறைவு பெற்றது. ஏழு சிரஞ்சீவிகளுள் பரசுராமரும் ஒருவராக வைத்து எண்ணப்பட்டு வருகிறார்.

வாமனராகி மண்ணை யாசித்தார் திருமால். அதுவும் மூன்றடி மண் மட்டுமே! நிலம் ஒவ்வொரு மனிதனுக்கும்இருக்க வேண்டிய சொத்து. அதை எவ்வகையிலேனும் பெற்றே தீரவேண்டும். ஆனால் எல்லாநிலமும் தனக்கே வேண்டும் என்ற பேராசை கூடாது. பாரதியாரும் பராசக்தியிடம் ஒரு காணி நிலம் மட்டுமே வேண்டுகிறார் :

'' காணி நிலம் வேணடும் பராசக்தி!
காணி நிலம் வேண்டும்!''

என்பது பாரதியின் அவா!

நிலம் படைத்தவன் வாழ்வில் உயர்வடைவான் என்பதை உலகுக்குணர்த்தவே, குள்ளனாக வந்த திருமால் நெடுமாலாக வளர்ந்து காட்டினார்.

நிலத்தைப் பெற்றுவிட்டால் மட்டும் போதுமா: கல்லும் முள்ளும் நீக்கிப் பண்படுத்த வேண்டாமா? அறம் தவறிக் கொடுமை செய்யும் அரச மரபினராகிய கல்லையும் முள்ளையும் அழித்து ஒழிக்க எழுந்த அவதாரமே பரசுராம அவதாரம்!

பண்பட்ட நிலத்தின் பயனைத் தானே அனுபவிக்கலாமா? பலர்க்கும் பகிர்ந்தளிக்க வேண்டாமா? எனவேதான், காசினியைக் காசியர் முதலான முனிவர்க்குப் பகிர்ந்தளித்தார் பரசுராமர்!

திருமாலின் திரு அவதாரங்களுள் பரசுராமரின் வலிமையும் வெற்றியும் வியப்புக்குரியது. மும்மூர்த்திகளுள் முதல்வராகக் கருதப்படுபவர் முக்கட் பெருமான்! அவர் அமர்ந்துறையும் இடம் கைலாயம். அந்தக் கைலாயத்தைத் தன் கையாலேயே பெயர்த்தெடுத்தவலிமையுடையவன் இராவணன். அந்த இராவணனையே வெற்றி கொண்டவன் கார்த்தவீரியன். அந்தக் கார்த்த வீரியனையே கொன்றொழித்த ஆற்றல் மிக்கவர் பரசுராமர் எனின், அவர்வீரமும் வெற்றியும் விளம்பும் தகைத்தோ!

பரசுராம அவதாரத்தை அடுத்து நிகழ்ந்த அவதாரம் இராமாவதாரம். ஆனால், ஏககாலத்தில் இரண்டு ராமர்களும் சந்திக்கின்றனர். இது எவ்வாறு சாத்தியமாகும்? சற்று ஆராய்வோம்.

திருமாலே பூவுலகில் வந்து அவதரிப்பதில்லை. அவரின் ஆற்றல்மட்டுமே பூமியில் வந்து அவதரிக்கிறது. பூமிபாரம் நீங்கும் பொருட்டுத் திருமாலின் ஆற்றல் பரசுராமராக வடிவெடுத்தது. கொடியவர்களைக் கொன்றொழித்தபின், பரசுராமரின் ஆற்றல் அடங்கிப்போகிறது. எனவே அடுத்த அவதாரமான இராமாவதாரத்தில், பரசுராமரிடம் எஞ்சியிருந்த திருமால் ஆற்றலும் இராமபிரான் வில்லாற்றல் மூலம் கவரப்பட்டு விடுகிறது. தன் அவதார நோக்கம் முடிந்தவுடன் பரசுராமர் தன் ஆற்றலை இராமரிடம் ஒப்படைத்து விட்டுத் தான் விடைபெற்றுக் கொள்கிறார்.

பதவிக்காலம் முடிந்தால் பதவியில் இருப்பவர் விடைபெற்றுக் கொள்வதும், பதவியேற்பவர் பொறுப்பேற்பதும் நடைமுறையில் காணப்படும் செயல்தானே! எனவே இராமர் இருவரும் ஏககாலத்தில் சந்தித்துக் கொள்ளும் நிகழ்ச்சியில் சர்ச்சைக்குரியது எதுவும் இல்லை.

பிற அவதாரங்களைப் பூசித்து வழிபடுதலைப் போல, பரசுராமரைப் பூசித்து வணங்கும் நிலை வழக்கத்தில் இல்லை. ஏன்? இவ்வடிவம் ஆவேச வடிவமுடையது. பிற அவதாரங்களில் காணப்படும் அருள்சக்தி பரசுராமரிடம் இல்லை. வெறும் ஆவேச சக்தி மட்டுமே உள்ளது. எனவேதான், பரசுராமரைப் பூசித்துப் போற்றும் பழக்கம் நம்மிடையே இல்லை.

முக்தியடைய நினைப்போர்க்கு இவ்வவதாரம் முக்கிய மானதன்று. என்றாலும், இவ்வவதாரம் போற்றிப் புகழ்தற்குரிய அவதாரமே!

"தந்தை சொல் மிக்க மந்திரமில்லை!'' என்னும் தத்துவத்தை உலகுக்குணர்த்திய அவதாரம் பரசுராமஅவதாரம். தந்தையின் சொற்படி நடக்கும் எந்தத்தனயனும் தான் விரும்பியதை விரும்பியவாறே அடைவான் என்பதையும் இவ்வவதாரம் நமக்குணர்த்துகிறது.

பரசுராமரின் பதமலரை நினைப்போர் பாரில் பல நலன்களும் பெற்றுயர்வர். இனி, பூர்ண அவதாரம் எனப்படும் இராமாவதாரம் பற்றிக் காண்போம்!

(தொடரும்)

# ஒளி படைத்த கண்ணினாய் வா! வா! வா!

உறுப்புகளிலெல்லாம் சிறந்தது கண்ணே. அதனால்தான் குழந்தையையும் தெய்வத்தையும் 'கண்ணே! கண்மணியே! மணியாடுபாவாய்' என்றெல்லாம் போற்றி புகழக் காண்கின்றோம்.

கண்ணுக்கு இன்னும் பல சிறப்புகள் உள்ளன. காது, மூக்கு, கை, கால் முதலிய உறுப்புகளுக்குத் தோடு, மூக்குத்தி முதலிய அணிகலன்கள் பல இடுகின்றோம். அவற்றையெல்லாம் கண்டு மகிழ்வது கண்ணே. என்றாலும் அது தனக்கென ஒரு அணியை அணிந்து கொள்வதில்லை. கண்ணுக்கு இடும் கண்ணாடியையும் மூக்கு தனக்கு உரிமையாக்கிக் கொண்டு மூக்குக் கண்ணாடி என்று சொந்தம் கொண்டாடுகின்றது.

இன்னொரு சிறப்பும் கண்ணுக்கு உண்டு. கையில் கத்தி வெட்டிவிட்டது. காலில் முள் தைத்து விட்டது. தலை வலிக்கிறது, வயிறு நோவுகிறது இவற்றையெல்லாம் கண்டும் கருதியும் கலங்குவது கண்தானே. ஆனால் கண்ணுக்கு வரும் நோய்க்காக எந்த உறுப்பு வருந்துகின்றது?! இதனால் தான் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனாகிய 'ஆயர்தம் கொழுந்தை' 'கண்ணன்' எனப் போற்றினர் நம் தமிழ்ச்சான்றோர்.

கண்ணுக்கு அணிகலன் இல்லையே! என்று திருவள்ளுவர் ஏங்கியிருக்கக் கூடும்: அதனால்தான் கண்ணுக்கு என ஓர் அணிகலத்தை எண்ணிப்பார்கின்றது அவர் அருள் நெஞ்சம். இரக்க உணர்வே அதற்கேற்ற அணிகலனாக அவர் தேர்ந்து எடுக்கிறார். 'கண்ணுக்கு அணிகலன் கண்ணோட்டம்' என்பது குறள்.

மண்ணுக்கும் மக்கள் வாழ்விற்கும் கண் போன்றவர்கள் இன்றைய இளைஞர்கள். கண்கெட்டால், இளைஞர்கள் கேடுற்றால் மண்ணும் மக்கள் சமுதாயமும் குருடாகிவிடும். எனவே கண்ணன்ன அத்தகு இளைஞர்கள் மண் வளத்திற்கும் மக்கள் நலத்திற்கும் இன்றியமையாதவராவர். அவர்கள் தெளிந்த சிந்தையும் திறமான செயலுந்தான் இன்றைய உலகை வாழ்விக்கும்; வளர்க்கும்.

இன்றைய இந்தியாவின் குறைதான் என்ன? எத்தனைக் கோடி இளைஞர்கள் கற்கிறார்கள்! ஆய்கிறார்கள்! என்றாலும் கோடிக்கு ஒருவரே இருவரே புதியதொன்றைப் புத்துலகுக்கு வழிகாட்டும் அரியதொன்றைப் படைக்கிறார்கள். இந்திய மண்ணின் படைப்பாற்றல் எல்லாம் எங்கே போயிற்று? என்ன ஆயிற்று? என்று எண்ணிப் பார்த்து ஏங்குகிறார். பாரதியார்.

கணிதம் பன்னிரண்டாண்டு பயில்கிறார்களே! கார்கொள் வானிலே ஓர்மீனின் நிலையை அவர்களால் தெரிய இயலவில்லையே! அணிசெய் காவியம் ஆயிரம் கற்கின்றனரே; ஆனால் ஆழ்ந்து இருக்கும் கவி ஒருவனின் உள்ளக்கிடக்கையை அறியாது போகின்றனரே. வணிகமும் பொருள்நூலும் கண்மூடி நெட்டுருச் செய்து காலம் கழிப்பதால் வாடும் நாட்டின் வறுமையை நீக்க இயலுமா? கம்பன் என்ற மானிடன் வாழ்வையும், காளிதாசன் கவிதைத் திறனையும், வானிலை தேர்ந்த பாஸ்கரன் மாட்சியையும், ஒல்காப் புகழ்த் தொல்காப்பியர் மொழியையும், அத்துவிதம் கண்ட சங்கரர் ஏற்றமும் எத்துணைப்பேர் உணர்ந்துள்ளார்கள்?! உணர்ந்து உயர்ந்துள்ளார்கள்! இப்படி இப்படி எல்லாம் ஏங்குகின்றார் அமரகவி பாரதியார்.

இருள்; வறுமை என்னும் இருள், அறியாமை என்னும் இருள்; கொடுமை என்னும் இருள் ஒழியாதா? வளம் எனும் ஒளி, அறிவு எனும் ஒளி, அருள் எனும் ஒளி ஓங்காதா? இன்றைய இளைஞர்கள் இந்திய மண்ணின் ஒளியாக விளங்கமாட்டார்களா? என்றெல்லாம் ஏக்கத்தோடு அவர் எண்ணுகின்றார்.

ஏ இந்திய இளைஞனே! எழுந்து நின்று பார்! உன் பார்வை மண்ணையும் விண்ணையும், முன்னையும் பின்னையும், அன்றையும் இன்றையும் ஒன்றாகக் காணட்டும்; நன்றாகக் காணட்டும். உன் பார்வை உலகெங்கும் ஒளியைப் பரப்பட்டும். நீ காணுகின்ற மண் பாலையானாலும் பசுஞ்சோலை ஆகுவதாகுக! நீ பார்க்கின்ற குன்று கல்லானாலும் அங்கு ஒரு கோயில் எழுவதாகுக! நீ கருதுகின்ற ஆறு சிறு அருவியிலிருந்து தோன்றினாலும் ஆங்கோர் மின்நிலையம் உருவாகுக! உன் பார்வை படுகின்ற இடமெல்லாம் புதுப் புது படைப்புகள் தோன்றுவனவாகுக!

ஒளியைப் படைக்கும் இளைஞனே! உலகு படைக்க வா! ஒளி நிறைந்த கண்ணனே உலகை உணர வா! உள்ளத்தின் உண்மையைக் கண்ணால் உணர்த்தும் இளைஞனே! இந்த மண்ணில் நீ தோன்றுவாயாக; தொடர்ந்து தோன்றுவாயாக! கண்ணீர் விட்டு வளர்த்த இந்தச் சுதந்திரப் பயிர் உன் கண்ணொளியால் வளர்வதாகுக. இரத்தம் சிந்திப் பெற்ற இந்த உரிமை உன் இதய உணர்வால் சிறப்பதாகுக!

ஒளி படைத்த கண்ணினாய்
வா! வா! வா!

கண்ணனடியான்
சென்னை

# திருமலை திருப்பதி தேவஸ்தானம்
# திருப்பதி

## திருமலையில் ஏழுமலையானின் ஏழை பக்தர்களுக்கு இலவச உணவு வழங்க உங்களுக்கு விருப்பமுள்ளதா?

இந்து சமய இலக்கியங்கள் மற்றும் பல புராணக்கதைகள் ஏழை எளியோர்க்கு வழங்கப்படும் அன்னதான மகிமையைப் பற்றி விளக்கிக் கூறுகின்றன. அதுவும் குறிப்பாகத் திருமலை போன்ற திருத் தலத்தில் இறைவனைத் தரிசிக்க வரும் ஏழை யாத்திரிகர்களுக்கு இலவச உணவு வழங்கப்படுவது சாலச் சிறந்ததாகும். அதுபோலவே இறைவனின் பிரஸாதங்கள் அவனுடைய பக்தர்களுக்கு விநியோகிக்கப்படு வதும் மிகவும் உன்னதமாகவும், வழக்கில் இருந்து வருவதாகவும் கருதப்படுகிறது.

இவ்வகையில் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரால் புகுத்தப்பட்ட ''ஸ்ரீவேங்கடேஸ்வரா நித்யபிரஸாத தான அறக்கொடை'' திட்டத்தின் கீழ் நீங்கள், திருமலையில் இறைவனைத் தரிசிக்க வரும் ஏழை யாத்திரிகர்களுக்கு இறைவனின் பிரஸாதங்களான உணவுப் பொட்டலங்கள் அல்லது லட்டுகள் அல்லது வடைகள் ஆகியவற்றை இலவசமாக வழங்கலாம்.

திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கு ரூ. 500-ஐ முதலில் அறக்கொடையாக வழங்குதல் வேண்டும். இத்தொகையினால் வரும் வருட வட்டித் தொகையினைக்கொண்டு ஒவ்வொரு வருடமும் 20 ஏழை யாத்திரிகர்களுக்கு இலவசமாக உணவு வழங்கப்படும். அல்லது 'க்யூ' வரிசைகளில் வரும் யாத்திரி கர்களுக்கு 15 லட்டுகள் அல்லது 15 வடைகள் பங்கிட்டு வழங்கப்படும்.

இவ்இலவச பிரஸாத வழங்கீடு, வருடத்தில் ஒரு நாளின்போது—அது உங்கள் பிறந்த நாளிலோ—திருமண நாளிலோ—உங்கள் பிள்ளை அல்லது மகளுடைய பிறந்த நாளிலோ—உங்கள் தாய் அல்லது தந்தையாரது நினைவு நாளிலோ—அல்லது உங்களுக்கு ஏதேனும் ஒரு வகையில் பிடித்தமான நாளிலோ—நடைபெறும்.

ஒரு நபர் எத்தனை அறக் கொடைகளாவது வழங்கலாம். ஒவ்வொரு அறக்கொடைக்கான இலவச பிரஸாத வழங்கீடு, நீங்கள் விரும்பும் வெவ்வேறு நாளின் போது நடைபெறும். குறைந்தபட்சம் 10 அறக்கொடைகள் வழங்கினால், அறக்கொடை வழங்கிய நபரைச் சார்ந்த 5 நபர்களுக்கு, இலவசப் பிரஸாத வழங்கீட்டு நாளின்போது, இறைவனின் இலவச தரிசன வசதி ஏற்பாடு செய்யப்படும். (இது தற்போது உள்ள 5 சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட்டுகளின் மதிப்பான ரூ. 125-க்கு சமமாகும்)

ஒவ்வொரு அறக்கொடையாளரின் பெயரும் கோத்ரமும், வழங்கீட்டு நாளின் போது கொலு வில் (இறைவனின் முன் நாள்தோறும் நடைபெறும் சபை) வாசிக்கப்படும்.

நீங்கள் அளிக்கும் இவ்அறக்கொடை தொகைகளுக்கு வருமான வரி விலக்கு உண்டு. நீங்கள் உங்களுடைய வருமான வரி கணக்கின் போது இவ் அறக்கொடையினைச் சுட்டிக்காட்டி வரிவிலக்கு பெற லாம். அறக்கொடையாளர்கள், தொகையினை இந்தியாவிலுள்ள ஆந்திர பேங்க் கிளை அலுவலகங்களின் மூலமாகவோ அல்லது தி. தி. தேவஸ்தானம், திருப்பதி எனும் முகவரியில் 'எக்ஸிக்யூட்டிவ் ஆபீஸர்' எனும் பெயரில் 'டிமாண்ட் டிராப்ஃட்' ஒன்றினை எந்த வங்கி மூலமாவது வாங்கி 'மேனேஜர், ஆந்திரா பேங்க், தி. தி. தேவஸ்தான நிர்வாகக் கட்டிடம், திருப்பதி, 517501' எனும் முகவரிக்கு கீழ்க்காணும் விவரங்களுடன் அனுப்புதல் வேண்டும்.

1. தொகை அனுப்புவோரின் பெயர், முகவரி.
2. பிரஸாத வழங்கீடு யார் பெயரில் செய்யப்படவேண்டுமோ அவருடைய பெயர், முகவரி.
3. யாருக்கு வருமான வரிவிலக்கு சான்றிதழ் வழங்கப்படவேண்டுமோ அவருடைய பெயர், முகவரி.
4. யாருடைய பெயரில் பிரசாத வழங்கீடு நடைபெற வேண்டுமோ அவருடைய கோத்திரம், குடும்பப் பெயர்.
5. பிரஸாத வழங்கீடுக்குரிய நாள்
6. விநியோகிக்கப்படவேண்டிய வகைகள் விவரம் :
   உணவுப் பொட்டலங்கள்/லட்டு/வடை (ஒரு வகை மட்டுமே குறிப்பிடல் வேண்டும்)
7. வழங்கப்பட்டத் தொகை.

விநியோகிக்கப்பட வேண்டிய நாளுக்கு, குறைந்தபட்சம், 15 நாட்களுக்கு முன்பாகவே தொகை அனுப்பப்படல் வேண்டும்.

(ஒம்.) செயலாட்சித் தலைவர்.
*தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.*

# இராசி பலன்

Dr. டி. அர்க்கசோமயாஜி, M.A., Phd.
திருப்பதி.

(1-5-81 முதல் 31-5-81 வரை)

## மேஷம்

(அசுவனி, பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய)

மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பிரயாணமும், உடல் சோர்வும் இருக்கும். மேலும் தவறான ஆலோசனைகளைப்பற்றி எச்சரிக்கையாக இருத்தல் நலம். ஏனெனின் அதனாற்றான் பண நஷ்டம் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல் ஏற்படும். கருத்து வேறுபாடுகள், அதனால் மனயமைதி யிழத்தல். எனினும் நாட்கள் கேளிக்கைகளுடன் கூடியதும், நம்பிக்கையுடனும் அமையும்.

## விருஷபம்

(கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய)

மாதத்தின் முதல் 15 நாட்களின் போது அனுவசியமான செலவினங்கள். பிள்ளைகள் அல்லது பெண்கள் காரணமாகக் கவலைக்குள்ளாதல், தவறான ஆலோசனைகளைக் கேட்பதனால் பண நஷ்டம் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல். 6-ம்தேதிக்குப் பிறகு கேளிக்கைகளில் ஈடுபடல், உற்சாகத்துடன் விளங்கல்.

## மிதுனம்

(மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)

மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பணவரவு, பெண்கள் மூலமாக தொல்லைகளுக்குள்ளாதல், உற்றார் உறவினருடன் கருத்து வேறுபாடுகள் அல்லது பண நஷ்டம். கடைசி வாரத்தின்போது தவறான ஆலோசனையைக் கேட்டு நடக்க வேண்டிய சூழ்நிலை உருவாகும்.

## கடகம்

(புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய)

இம்மாதத்தின்போது இவ் ராசிக்காரர்கள் புகழ்ச்சியின் உச்சிலை அடைவர், அலுவலக மதிப்புயர்தல். அதிக பண வரவு, அவ்வப்போது பிரயாணம். தீய எண்ணங்கொண்டோர் கேடு செய்ய முயற்சி செய்யினும், வெற்றியடைய மாட்டார்கள். நல்ல நட்புறவுகள் ஏற்படும். தெய்வ வழிபாடு, எல்லா எதிர்ப்புகளையும் முறியடிக்கும்.

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

முதல் வாரத்தின்போது சத் காரியங்களில் ஈடுபடல், பண வரவாயினும், அதற்கேற்ப செலவினங்கள். 2, 3வது வாரங்கள் நன்மை தருவனவாக விளங்கும். மாதத்தின் முதல் 15 நாட்களின்போது சிறிது உடல் நலம் கெடல். இரண்டாவது 15 நாட்களின்போது முயற்சிகள்வெற்றியடைதல். அவ்வப்போது கருத்து வேறுபாடுகளுக்குள்ளாக நேரிடலாம்.

## கன்னி

(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய)

முதல்வாரம் நன்றாக அமையினும், பின்னர் ஒருவர் நம்பிக்கையற்று இருப்பர். மாதத்தின் முதல் 15 நாட்களின் போது சிறிது உடல் நலம்கெடல், மனைவிக்கு மனமகிழ்ச்சியின்மை. 6-ம் தேதிக்குப் பிறகு சத் காரியங்களில் ஈடுபடல், உற்றார் உறவினருடன் பிரிவு, பணவரவு மற்றும் புதிய ஆடை ஆபரணங்கள்.

## துலா

(சித்திரை 3-ம்பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய)

மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பிரயாணம் அல்லது கண் சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல். முதல் வாரத்தின் போது பெண்கள் காரணமாகத் தொல்லைகளுக்குள்ளாதல் அல்லது கருத்து வேறுபாடுகள். பின்னர் கேளிக்கைகளில் ஈடுபடல், புதிய ஆடை ஆபரணங்கள். மனைவியுடன் கருத்து வேறுபாடு ஏற்படலாம். மாதத்தின் இரண்டாம் 15 நாட்களின்போது சிறிது உடல் நலம் கெடல்.

## விருச்சிகம்

(விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய)

இவ்ராசிக்காரர்களுக்கு இம்மாதம் முழுவதும் சிறப்பாகவும், பணவரவு உடையதாயும் அமையும். மேலும், தானிய லாபம், அலுவலக பதவி உயர்வு ஆகியவை அமையும். ஒப்பிடும் போது முதல் 15 நாட்களின் போது பெண்கள் மூலமாக தொல்லைகளுக்குள்ளாதல் அல்லது சிறிது கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல். எனினும் தீய நடவடிக்கைகளில் பங்கேற்றலுக்குரிய சூழ்நிலை அமைய நேரிடலாம்.

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய)

எந்தவிதமான குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியும் இராது. முதல் வாரமும் கடைசிவாரமும் கருத்து வேறுபாடுகளை உண்டாக்கும். முதல் வாரத்தில் விருந்தினர் வருகை. பிள்ளைகள் அல்லது பெண்கள் காரணமாக கவலைக்குள்ளாதல், மாதத்தின் முதல் 15 நாட்களின் போது சிறிது உடல் நலம் கெடல். இரண்டாம் 15 நாட்கள் நன்றாகஅமையும். மதிப்

புக்கு கேடு நேரிடும் வகையில் சூழ்நிலை ஏற்படலாம். ஆகையால் எச்சரிக்கை அவசியம்.

## மகரம்

(உத்திராடம் 2-ம் பாதம் முதல் திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய)

பணவரவு அல்லது தீயநடவடிக்கையில் ஈடுபடல். தீய எண்ணங் கொண்டோரால் கருத்து வேறுபாடுகள் ஏற்படல்; 6-ம் தேதி முதல் 22-ம் தேதிவரை குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள்: சிறிது உடல்நலம் கெடல்அல்லது வயிறுசம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல். கூடா நட்புறவுகளை தவிர்த்தல் நலம். கடைசி வாரத்தின் போது முயற்சிகள் வெற்றியடைதல்.

## கும்பம்

(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)

தவறான வழியில் பணவரவு, உற்றார் உறவினருடன் பிரிவு, அல்லது பிரயாணமும் உடல் சோர்வும் முதல் வாரத்தின் போது நண்பர்கள் காரணமாக தீய நடவடிக்கைகளில் பங்கேற்றல். கடைசி வாரத்தின் போது குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள். கடைசி மூன்று வாரங்களின் போது உறவினர் வருகை, பெரியோர்களது பாராட்டுதல்களுக்குள்ளாதல்.

## மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

பிரயாணம், கேளிக்கைகளில் ஈடுபடல், அலுவலகக்கவலைகள் அல்லது வீட்டில் திருடுபோதலால் அல்லது வேறு காரணங்களால் பணநஷ்டம். இரண்டாம் 15 நாட்களின் போது பணவரவு, புதிய ஆடை ஆபரணங்கள்,நண்பர்கள் முதலியன. எனினும் தவறான செய்கைகளில் ஈடுபடல் நேரிடலாம். ஆகையால் எச்சரிக்கை தேவை.



# திருப்பதி கங்க ஜாத்ரா

ஆந்திர மாநிலம் சித்தூர் மாவட்டத்தில் குறிப்பாக திருப்பதியில், தெலுங்கு வைசாக மாதத்தின் முதல் செவ்வாய்க் கிழமையன்று ஆரம்பமாகும், கங்கை அம்மனுக்காக நடைபெறும் இக் ''கங்க ஜாத்ரா'' எனும் சமய விழா சிறப்புக்குரியதாகும். இவ்விழா அம்மன் பிறந்த ஊரான அவிலாலாவில் (திருப்பதிக்கு அருகு உள்ள ஒரு கிராமம்) ஆரம்பமாகும். திருப்பதியில் இவ் விழா 8 நாட்களுக்கு சாதாரணமாக மே மாதத்தின் 2-ம் வாரத்திலிருந்து (செவ்வாய்க் கிழமையிலிருந்து) அதாவது இவ்வாண்டு 5–5–81 லிருந்து கொண்டாடப்படும். இந்நாட்களின் போது இவ்விழாவில் பங்கேற்கும் நபர்கள் நாள் முழுவதும் பல வேடங்கள் புனைந்து நகர் வலம் வருவர். இதுபோது இவர்கள் தகாக வார்த்தைகள் பல கூறிக்கொண்டும் செல்வர். இதற்கு மூலகாரணம் என்ன என்பது தெரியவில்லை. வேடங்களில் 'மாதங்கி' 'சுண்ணப்பு குண்ட' எனும் வேடங்கள் சிறப்பாக இருக்கும். இறுதி நாளன்று ஜாதி மத பேதமின்றி, 'தாள்ளபாக்க கங்கம்மா' மற்றும் 'தாதய்யகுண்ட கங்கம்மா' என்னும் திருஉருவங்களை வழிபடுவர். பின்னர் ஆடு, கோழிகள் பலிகளுக்குப்பிறகு, இத்திருவுருவங்கள் அழிக்கப்படுவதுடன் விழா முடிவுறும். சிதைக்கப்பட்ட உருவங்களின் மண்ணினை பொது மக்கள் சிறிது சிறிது எடுத்துக்கொண்டு, அதனை நீருடன் கலந்து வீட்டில் உள்ள குழந்தைகள் முதல் பெரியவர்வரை உட்கொள்வர். இதனால் வீட்டில் நிலவும் சகலவியாதிகளும், தீய காற்றுகளும் அகலும் என்று நம்பப்படுகிறது.

மாறிவரும் நாகரிகத்தின் காரணமாக இவ்விழா சில ஆண்டுகளாக தன் இயற்கைத் தன்மையினை இழந்து வருகின்றது.

ஆதாரம் :— சென்னைமாவட்ட சிறு குறிப்பேடுகள்,
வடஆற்காடு-தொகுப்பு
1895 ஆண்டு.

தகவல் : திருமதி. கே. அன்னபூர்ணா-திருப்பதி.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER. T. T. D. PRESS, TIRUPATI-517501.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

| உத்ஸவ கட்டணங்கள் | | ஸேவைகள் | |
|---|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ரூ. 2500/- | அமந்த்ரணோத்ஸவம் | ரூ. 2000/- |
| பிரம்மோத்ஸவம் | ரூ. 750/- | திருமஞ்சனம் | ரூ. 500/- |
| கல்யாணோத்ஸவம் | ரூ. 1500/- | ஸகஸ்ரகலஸாபிஷேகம் | ரூ. 2500/- |
| ஊஞ்சல் சேவை | ரூ. 1000/- | திருப்பாவாடை | ரூ. 5000/- |
| தெப்போத்ஸவம் | ரூ. 1500/- | கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ரூ. 1745/- |
| | | ஸகஸ்ர தீபாலங்கார சேவை | ரூ. 2000/- |

நித்ய சேவைகள் (ஆண்டொன்றுக்கு)

| | | | |
|---|---|---|---|
| நித்ய கற்பூர ஹாரத்தி | ரூ. 150/- | நிரந்தர கற்பூர ஹாரத்தி | ரூ. 3000/- |
| நித்ய நவநீத ஹாரத்தி | ரூ. 400/- | நிரந்தர நவநீத ஹாரத்தி | ரூ. 8000/- |
| நித்ய அர்ச்சனை | ரூ. 200/- | நிரந்தர நித்ய அர்ச்சனை | ரூ. 4000/- |

மேற்படி ஆர்ஜித ஸேவைகளுக்குரிய குறிப்பிட்டதொகைக்கான D. D. ஒன்றினை 'The Executive Officer, T. T. D. Tirupati' எனும் பெயரில், எந்த வங்கி மூலமாகவாவது பெற்று, அதனை தேவையான தகவல்களுடன் (ஆங்கிலத்தில்) The Peishkar, T. T. D. Tirumala எனும் முகவரிக்கு 15 நாட்களுக்கு முன்கூட்டியே அனுப்புதல் வேண்டும்.

# தங்கு வசதி விவரங்கள்

திருமலையிலும், திருப்பதியிலும் தி. தி. தேவஸ்தானத்தாரின் இலவச தங்கு வசதிகள் தவிர்த்து, குறைந்த வாடகை கட்டணங்களில் குறைந்தபட்ச வசதிகளுடன் கூடியது முதல் குளிர்ச்சாதன வசதிகளுடன் கூடிய காட்டேஜுகளில் யாத்திரிகர்கள் தங்கலாம்.

குறிப்பிட்ட தொகையினை ஒரு வாரத்திற்கு முன்கூட்டியே செலுத்தினால், திருமலையில் அல்லது திருப்பதியில் தங்கு வசதிக்கான ஒதுக்கீடு அளிக்கப்படும். தேவையான தங்குவசதியின் சரியான விவரத்தையும், சரியான முகவரியையும் தங்கள் மனுவில் குறிப்பிட்டு அதனுடன் தொகைக்கான டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியார்டர் ரசீதினை இணைத்தல் வேண்டும். குறிப்பிட்ட தங்குவசதி அளிக்க முடியாதிருப்பின், வேறு தங்கு வசதி அளிக்கப்படும். தொகை பெற்றுக் கொண்ட உடனேயே, ஒதுக்கீடு அட்டை அனுப்பப்படும். தங்கு வசதிக்காக திருமலைக்கு வருபவர்கள், இவ் ஒதுக்கீடு அட்டையினை குறிப்பிட்ட விசாரணை அலுவலகத்தில் காட்டல் வேண்டும். இவ் அட்டையினையோ அல்லது மணியாடர் ரசீதினையோ அல்லது தொகையினைப் பெற்றுக்கொண்டதற்கான ரசீதினையோ காண்பிக்காவிட்டால், அவர்களுக்கு தங்குவசதி அளிக்கமுடியாது. ஒரு நாள் என்பது காலை 8 மணி முதல் அடுத்த நாள் காலை 8 மணி வரை என்பதாகும். டிமாண்ட் டிராஃபட் அல்லது தொகை பெற்றுக் கொண்டதற்கான ரசீது அல்லது மணியார்டர் ரசீதுடன் கூடிய விண்ணப்பங்கள் யாவும் Reception Officer, T. T. Devasthanams, Tirumala அல்லது Tirupati எனும் முகவரிக்கே அனுப்பப்படல் வேண்டும். டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியாடர் குறிப்பிட்ட Reception Officer எனும் பெயரில்தான் எடுத்தல் அல்லது அனுப்பப்படல் வேண்டும். செக்குகள் (Cheques) ஏற்றுக்கொள்ளப்படமாட்டா.

Regd. No. H/TRP/12 தனிப்பிரதி 50 காசு

ஸ்ரீ வேங்கடேஸ்வர பரப்ரஹ்மணே நம:

## நீ ஓர் இந்து - அதற்காகப் பெருமைப்படு!
## பெருமை வாய்ந்த சரித்திரம் உனக்குள்ளது; அதனை மறவாதே!
## அரும்பெரும் தத்துவக்கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட பேரியக்கம் இந்து சமயம்

உண்மையான ஓர் இந்துவாக செயற்படு — கீழ்வருவனவற்றைக் கடைப்பிடி

✠ உனக்கு விருப்பமான சமயக்குறியை (திலகம், சந்தனப்பொட்டு, விபூதி, நாமம்) நெற்றியில் இட்டுக் கொள்ளும் பழக்கத்தை மேற்கொள்.

✠ தினம் குறைந்தபட்சம் ஒரு முறையாவது ஸ்நானத்திற்குப் பிறகு இறைவனின் நாமத்தை ஜெபிக்கவும்.

கீழே கொடுக்கப்பட்டுள்ள நாமங்களில் ஒன்றை அல்லது ஒருசிலவற்றையாவது தேர்ந்தெடு

ஓம் ஸ்ரீ வேங்கடேஸாய நம:

ஓம் நமோ பகவதே வாசுதேவாய

ஓம் நமோ நாராயணாய

நமசிவாய

ஹரே ராம ஹரே ராம ராமராம ஹரேஹரே
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ணகிருஷ்ண ஹரேஹரே

✠ தினந்தோறும் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதத்தின் குறைந்தபட்சம் 10 ஸ்லோகங்களை பாராயணஞ்செய்.

✠ வாரத்திற்கு ஒரு முறை உன் குடும்பத்தாருடன் உனக்கு விருப்பமான கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபடு.

✠ உங்கள் வீட்டிற்கு முன் 'ஓம்கார்' எனும் முத்திரையினை ஒட்டவும்.

✠ தினந்தோறும் பகவத்கீதையில் குறைந்தபட்சம் ஒரு ஸ்லோகத்தையாவது பாராயணஞ்செய்.

✠ சமுதாய சமய விழாக்களில் ஏதாவது ஒருவகையில் பங்கேற்றுக்கொள்:

---

அவனை நம்பு - அவன் உன்னைக் காப்பான்

---

## திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.